# கேன்டர்பரி கதைகள்

(மொழிபெயர்ப்பு)

மூலம் : **ஜெஃப்ரி சாஸர்**

(கி.பி. 1343 - 1400)

தமிழில் : **எஸ். ரமேஷ்**



**Source :**

**'*Canterbury Tales*' - Geoffrey Chaucer**

**( A.D. 1343 – 1400 )**

**Translated by : S. Ramesh**

***Shakespeare's Desk***



| | | | |
|---|---|---|---|
| 1. | Title of the Book | : | ***கேண்டர்பரி கதைகள் —*** **Canterbury Tales** **( மொழிபெயர்ப்பு )** |
| 2. | Name of the Author | : | S. Ramesh — எஸ். ரமேஷ் |
| 3. | Subject of the Book | : | Literature — Translated Poetry |
| 4. | Language of the Book | : | Tamil — தமிழ் |
| 5. | No. of Pages | : | 96 pages |
| 6. | Year of Publication | : | 2013 |
| 7. | Address of the Author | : | எஸ். ரமேஷ்<br>53, கந்தாடைத் தெரு,<br>ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 125.<br>விருதுநகர் மாவட்டம்.<br>Cell : 87542 24076 |
| 8. | Address of the Publication Office | : | *Shakespeare's Desk*<br>53 KANDHADAI STREET<br>SRIVILLIPUTTUR - 626 125<br>VIRUDHUNAGAR DISTRICT<br>TAMIL NADU, INDIA.<br>**E- mail** :<br>rameshzillion@hotmail.com<br>Cell : 87542 24076 |
| 9. | Paper Quality/ Size | : | 60 GSM Maplitho 1/8 size |
| 10. | Price of the book | : | Rs. 100/- |
| 11. | சுய முகவரி | : | எஸ். ரமேஷ்<br>53, கந்தாடைத் தெரு,<br>ஸ்ரீவில்லிபுத்தூர் - 626 125<br>விருதுநகர் மாவட்டம்.<br>E-mail : rameshzillion@hotmail.com<br>செல் பேசி : **87542 24076** |
| 12. | Page Designed at | : | Ramsharan, Srivilliputtur |
| 13. | Printed at | : | Atchaya Printers, Sivakasi. |

This book has been published under the aid and aegis of funds granted for publishing books for Tamil language development by the Tamil Development Department of Tamil Nadu Government.

## சமர்ப்பணம் ...

1. தமிழக முதல்வர் அவர்களுக்கும்...
2. நிதி வழங்கிய தமிழ்நாடு அரசு, தமிழ் வளர்ச்சித் துறையின், தமிழ் வளர்ச்சி இயக்குநர், அதன் துணை இயக்குநர் மற்றும் அத்துறை சார்ந்த அத்துணை பெருமக்களுக்கும் ...
3. ஞானப்பால் ஊட்டிய முனைவர் பா.ஜெயராமன், ஆங்கிலப் பேராசிரியர் (ஓய்வு) வி.இ.நா.செ.கு.நா. கல்லூரி, விருதுநகர் அவர்களுக்கு...
4. விருதுநகர், வி.இ.நா.செ.கு.நா. கல்லூரியின் ஆங்கிலத்துறை மற்றும் அனைத்துத்துறைப் பேராசிரியர்களுக்கும்...
5. விருதுநகர், வி.இ.நா.செ.கு.நா. கல்லூரியின் ஆங்கிலத்துறைத் தலைவர் முனைவர் அ.மோகன்குமார், முனைவர் ஜே.சாமுவேல் கிருபாகர், முனைவர் எஸ். ஆர். செல்வம், முனைவர் வசீகரன், பேராசிரியர் கபிலர் அவர்களுக்கும்...
6. காந்தி கிராம பல்கலைக்கழக ஆங்கிலத்துறைப் பேராசிரியர் ஜி.பாஸ்கரன் அவர்களுக்கும்...
7. காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக ஆங்கிலத்துறையின் தலைவர் முனைவர் எஸ். சுப்பையா, முனைவர் எல். திருநாவுக்கரசு மற்றும் அத்துறையின் பேராசிரியப் பெருமக்கள் அனைவருக்கும்...
8. காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தின் கௌரவ பேராசிரியர் முனைவர் என். கலைதாசன் அவர்களுக்கு...
9. காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக துணைவேந்தர், பதிவாளர் மற்றும் அதன் உயர் நிர்வாகிகள் அனைவருக்கும்...

10. மதுரைக் காமராசர் பல்கலைக்கழக ஆங்கிலத்துறை தலைவர் டாக்டர் எஸ். செல்லையா, மற்றும் முனைவர் டி. கனகராஜ் (ஓய்வு) அவர்களுக்கும்...
11. ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூலகக்குழு நிர்வாகிகள் மற்றும் அதன் ஊழியர்களுக்கும்...
12. இராஜபாளையம் ராஜுக்கள் கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் சுரேஷ் தளியத் அவர்களுக்கும் ...
*13. தி நியூ இந்தியன் எக்ஸ்பிரஸ்*, சென்னை, நாளேட்டின் பொறுப்பாசிரியர் வி.சுதர்ஸன் மற்றும் அதன் செய்தி ஆசிரியர் ஆர். சுவாமிநாதன் அவர்களுக்கும்...
14. தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர் கிளை நிர்வாகிகளுக்கும்…...
15. அன்னை ஜெயா, மனைவி ரோகிணி மற்றும் புதல்வன் ஸ்ரீகாந்த் அவர்களுக்கும்......
16. மற்றும் இனிய தோழர்கள், உற்ற நண்பர்கள், என் புரவலர்களுக்கும்...
17. நண்பன் க. செல்வநாதனுக்கும்......
18. புரவலர் மதுரை மதன கோபால் என்ற வாசு அவர்களுக்கும்...
19. ஸ்ரீவில்லிபுத்தூர் இந்து மேல்நிலைப்பள்ளி நிர்வாகி, என் மாமா டி. ஏ. எஸ். ராமசுவாமி அவர்களுக்கும்...
20. இராஜபாளையம் நண்பர் கதாசிரியர் இரா. கதைப்பித்தன் அவர்களுக்கும்...
*21. மஞ்சரி* மாத இதழ் பொறுப்பாசிரியர் குரு. மனோகரவேல் அவர்களுக்கும்...
22. தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாத அய்யர் அவர்களுக்கும்...

---

இந்நூல் தமிழ்நாடு அரசின் தமிழ் வளர்ச்சித் துறையின்
தமிழ் வளர்ச்சிக்கான நூல் வெளியிட நிதியுதவித்
திட்டத்தில் உதவி பெற்று வெளியிடப் பெறுகிறது.

## உள்ளடக்கம்....

## பாகம் - I



## பாகம் - II

# 1. ஜெ.ஃ.ப்ரி சாஸர் - கால அட்டவணை
( Geoffrey Chaucer )

(கி.பி. 1343 (அ) 1344 – 1400 வரை)

கி.பி. 1343 (அ) 1344 - இலண்டன் நகரில் பிறப்பு

கி.பி. 1357 – 59 – உல்ஸ்டர் பிரதேச சீமாட்டியிடம் வேலைக்காரனாகப் பணிக்குச் சேருதல்.

| | | |
|---|---|---|
| 1360 | - | பிரஞ்சுப் போரில் எதிரிகளால் கைப்பற்றப்பட்டு மன்னர் எட்வர்டு - III அவர்களால் பிணையத் தொகை கொடுத்து மீட்கப்படுதல். |
| 1366 | - | பிலிப்பா என்ற பெண்ணுடன் திருமணம் |
| 1369 | - | 'சீமாட்டியின் புத்தகம்' (Book of the Duchess) எனும் நூல் வெளியிடப்பட்டது. |
| 1374 – 86 | - | இலண்டன் துறைமுகத்தில் சுங்கத் துறையில் பணி. |
| 1380 | - | 'புகழ் மிக்க வீடு ' (House of fame) நூல் எழுதப்பட்டது. இது ஒரு முற்றுப் பெறாத நூல். |
| 1385 | - | 'டிராய்லஸ் மற்றும் க்ரீஸீட் ' (Troilus and Criseyde) நூல் எழுதி முடித்தது. |
| 1386 | - | 'நல்ல மகளிரின் கதை' (Legend of Good Women) நூல். இது முற்றுப் பெறாத நூல். |
| 1387 | - | கேன்டர்பரி கதைகள் எழுதத் துவங்கியது. |
| 1389 -1391 | - | அரசவைப் பணியில் எழுத்தராகச் சேருதல் |
| 1390-1400 | - | ஸாமர்ஸெட் பிரதேசத்தில் உள்ள காடுகளில் வன அதிகாரியாகப் பொறுப்பு வகித்தல். |
| 1400 | - | மறைவு - அவரது சரீரம் இலண்டன் வெஸ்ட்மின்ஸ்டர் சதுக்கத்தில் அடக்கம் செய்யப்படுதல். |

## 2. ஜெ.ஃ.ப்ரி சாஸர் (கி.பி. 1343 – 1400)
## (Geoffrey Chaucer )
(A.D. 1343 – 1400)

**தோற்றுவாய் :**

ஜெ.ஃ.ப்ரி சாஸர், நவீன ஆங்கில இலக்கியத்தின் பிதாமகர் என்றே ஆங்கில இலக்கிய விமர்சகர்கள் அவருக்குப் புகழாரம் சூட்டுகின்றனர். அவர் எழுத்தாளர் மட்டுமல்ல. நல்ல கவிஞர் ; தத்துவவாதி, அரசு அதிகாரி, அவைச் சேவகர் மற்றும் ராஜப்ரதானி. அவர் அநேக நூல்கள் எழுதியிருப்பினும், அவர் எழுதிய குணச்சித்திர வரைவுகளை உள்ளடக்கிய "கேன்டர்பரி கதைகள்" எனும் நூலே அவரது மிகப் பிரசித்தமான படைப்பாகும். ஆங்கில மொழியின் மத்தியக் கால நடைமுறைப் பேச்சு வழக்கை, எழுத்தில் வடித்தது அவரது சாதனையே. அவரது சம காலத்தவர்கள், இலத்தீன் மற்றும் பிரஞ்சு மொழியில் ஆர்வம் கொண்டிருந்தனர். ஆனால், சாஸர் ஆங்கில மொழியின் முதுகெலும்பை நிமிர்த்தி வைத்தார்.

**சாஸரின் பிறப்பு :**

இலண்டன் நகரில் கி.பி. 1343 ல் அவர் பிறந்தார் என்று சொல்லப்பட்டாலும், அவர் எங்கு பிறந்தார் என்பது இன்னும் உறுதியாக அறியப்படவில்லை. சாஸரின் தந்தையின் பெயர் ஜான் சாஸர். சாஸரின் தந்தையும், அவரது பாட்டனாரும், இலண்டன் நகரில் திராட்சை மது வியாபாரம் செய்து வந்தனர். ஜான் சாஸர் ஒரு செல்வந்தர் என்பது பல குறிப்புகளில் இருந்து தெரிய வருகிறது.

**சாஸரின் துவக்கக் காலம் :**

ஜெ.ஃ.ப்ரி சாஸரின் துவக்கக் கால வாழ்வைக் குறித்தும், அவரது கல்வி குறித்தும், அவரது சம காலக் கவிஞர்களைக் குறித்துக் கிடைத்தது போலத் தகவல்கள் இல்லை.

ஆயினும், சாஸரின் தொழில் குறித்து சுமார் 500 எழுத்துக் குறிப்புகள் கிடைத்துள்ளன. எலிஸபெத் தே பர்க் சீமாட்டியின் உதவியாளராக 1357 ஆம் ஆண்டு அவர் பணியமர்ந்தார். அத்துடன் அவர் அரசவைப் பணியாளராக, அரசு ஊழியராகப் பணி செய்திருக்கிறார்.

1359 ல் நடைபெற்ற இங்கிலாந்து பிரான்ஸ் நாடுகளின் நூறாண்டு கால யுத்தத்தின் துவக்கக் கட்டத்தில், சாஸர் ஆன்ட்வெர்ப் பிரதேசத்தின் தளபதியுடன் இங்கிலாந்து ராணுவத்தின் சார்பாகப் போர் செய்யச் சென்றார். 1360 ஆம் வருடம், அவர் எதிரிகளால் கைது செய்யப்பட்டார். பிற்பாடு, மூன்றாம் எட்வர்டு அரசர் 16 பவுண்டு பிணையத் தொகையாகச் செலுத்தி, சாஸரை விடுதலை செய்ய ஏற்பாடு செய்தார். இதன் பிற்பாடு சாஸர், பிரான்ஸ், ஸ்பெயின், ஃப்ளான்டர்ஸ் ஆகிய தேசங்களுக்கு அரச காரியமாகப் பிரயாணம் சென்றதாகத் தகவல் தெரிய வருகிறது. அவர் 1366 ம் வருடத்தில் பிலிப்பா ரோட் என்ற பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

**சாஸரின் கல்வி :**

சாஸர், சட்டக் கல்வி பயின்றார் என்று நம்பப்படுகிறது. ஆயினும், இதற்கு ஆதாரம் இல்லை. 1367 ம் வருடம், மூன்றாம் எட்வர்டு மன்னரின் அரசவையில் பணியாளராகச் சேர்ந்தார் சாஸர். 1373 ம் வருடம், ராணுவ நடவடிக்கையின் ஒரு பகுதியாக, சாஸர் இத்தாலியில் உள்ள ஃப்ளாரன்ஸ் மற்றும் ஜெனோவா பகுதிகளுக்குச் சென்றார். அப்போது, அவர் புகழ் பெற்ற இத்தாலியக் கவிஞர்களான பீட்ரார்க் மற்றும் பொக்காக்கியோ ஆகியோரைச் சந்தித்திருக்கிறார். அப்போது, அவர்கள் இத்தாலியக் கவிதை மற்றும் அதன் வடிவங்கள், கதைகள் ஆகியவற்றை அறிமுகப்படுத்தி வைத்தனர். இவைகளை சாஸர் பிற்பாடு தன் படைப்புகளில் பயன்படுத்திக் கொண்டார்.

1378 ம் வருடம், மன்னர் இரண்டாம் ரிச்சர்ட், சாஸரை இத்தாலியில் உள்ள மிலான் நகருக்கு ரகசிய ராஜாங்க வேலையாக அனுப்பி வைத்தார். அப்போது சாஸர், இங்கிலாந்தின் கூலிப் படைத் தலைவன் ஜான் ஹாக்வுட் என்பவரைச் சந்தித்தார். அவனது தோற்றமும் நடை, உடை பாவனைகளையும் கவனித்து, அதை வைத்தே தன்னுடைய கேன்டர்பரி கதைகள் நூலில் வரும் பிரபு (Knight) கதாபாத்திரத்தைச் சித்தரித்தார்.

1374 ம் வருடம் ஜீன் மாதம், சாஸர் இலண்டன் துறைமுகத்தின் சுங்கத் துறையில் பணியேற்றார். அப்பணியில் அவர் 12 ஆண்டுகள் பணியாற்றியிருக்க வேண்டும். அதற்குப் பின் வந்த பத்தாண்டுகளில், அவர் மிகப் புகழ்பெற்ற புத்தகங்களை எழுதினார்.

சாஸருக்கு நிறைய அரசர்கள் புரவலர்களாக இருந்துள்ளனர். மன்னர் மூன்றாம் எட்வர்டு, சாஸருக்கு வழங்கிய பரிசு மிக விநோதமானது.

சாஸருக்கு தினமும் அரசு நன்கொடையாக ஒரு காலன் திராட்சை மது ( 1 காலன் =4 ½ லிட்டர்) கொடுக்கப்பட வேண்டும் என மன்னர் உத்தரவிட்டார். பிற்பாடு, இது மன்னர் இரண்டாம் ரிச்சர்ட்டின் காலத்தில் பணக் கொடையாக மாற்றப்பட்டது.

சாஸர் 1400ம் ஆண்டு மறைந்தார். அவரது பௌதீக சரீரம் இலண்டன் நகரில் வெஸ்ட்மின்ஸ்டர் சதுக்கத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

சாஸரின் படைப்புக்கள் :

1369 - "சீமாட்டியின் புத்தகம் ‘ (Book of the Duchess)

? - "அன்னலிடா மற்றும் ஆர்க்கைட்"

‘புகழ் பெற்ற வீடு’
(The House of Fame)

| | | |
|---|---|---|
| 1374-1386 | - | "பறவைகளின் பாராளுமன்றம்" (Parlement of Foules) |
| 1374-1386 | - | "நல்ல பெண்டிரின் கதை" (The Legend of Good Women) |
| 1374-1386 | - | டிராய்லஸ் மற்றும் கிரிஸீட் (Troilus and Criseyde) |
| ? | - | கேன்டர்பரி கதைகள் (The Canterbury Tales) |
| ? | - | மெய்யியலின் ஆறுதல் (Consolation of Philosophy) |
| ? | - | ரோஜாவின் கிளர் உணர்வு (The Romance of Rose) |
| ? | - | ‘ரோமானியனின் ரோஜா' The Romaunt of the Rose) |

(மேற்சொன்ன இம்மூன்று நூல்களும் சாஸரின் மொழிபெயர்ப்பு நூல்கள்)

| | | |
|---|---|---|
| 1380 களில் | - | ‘ஆஸ்திரலோப் குறித்த பட்டாய்வு‘ (Treatise on the Astrolabe) |
| 1380 களில் | - | ‘கிரகத்தின் பூமத்திய ரேகைக் கோடு' (Equatorie of the Planetis) |

(இந்நூலை எழுதியது சாஸர் தான் என்பது உறுதி செய்யப்படவில்லை எனினும், இந்நூலின் நடையை வைத்து, இதை சாஸர் எழுதியிருக்கலாம் என் ஆராய்ச்சியாளர்கள் நம்புகின்றனர்).

**சாஸரின் இலக்கியம் :**

ஜெ.ஃப்ரி சாஸர் என்றதும், யாவருக்கும் நினைவுக்கு வருவது, அவர் எழுதிய 'கேன்டர்பரி கதைகள்' (Canterbury Tales) மட்டுமே. சாஸர் எழுதிய ஆங்கில நடை, மத்தியக் கால ஆங்கிலம் ஆகும். அவருடைய செய்யுள், ஏற்ற - இறக்க நடை கொண்டதும், அளவான சீர்களை உள்ளடக்கியதுமான நெடும் செய்யுள் ஆகும். இதை Continental accentual syllabic meter என்று குறிப்பிடுகின்றனர்.

சாஸர் rhyme royal என்ற புதிய யாப்பு முறையை வகுத்தார். ஐந்தடுக்கு சீர், சாஸரின் கண்டுபிடிப்பு ஆகும். ஒவ்வொரு வரியின் கடைசியிலும் மோனை உள்ளது.

"When that Aprille with his shoures soote
The droghte of March hath perced to the roote,
And bathed euery veyne in swich licour
of which vertu engendered is the flour;
Whan Zephirus eek with his swete breeth
Inspired hath in euery holt and heeth…"

இது 14-ம் நூற்றாண்டில் சாஸர் எழுதிய மத்தியக் கால ஆங்கிலம் (Middle English).

இதன் நவீன ஆங்கில மொழிபெயர்ப்பு :

'When April with his showers sweet with fruit
The drought of March has pierced unto the root
And bathed each vein with Liquor that has power
To generate therein and sire the flower;
When zephyr also has with his sweet breath,
Quickened again, in every holt and heath'

இதே வரிகள் தமிழில் :

‘ஏப்ரல் மாதம் தன் பயனுள்ள மழை நீரால்,

வறண்ட மார்ச் மாதக் கோடைக் காலத் தாவரத்தை

அதன் வேர் வரை ஊடுருவி நனைத்து,

ஒவ்வொரு தாவர நரம்பையும் நீரில் ஊற வைத்து,

மீண்டும் அத்தாவரத்தை உயிர்ப்பித்தும், புஷ்பிக்க வைத்தும்,

காட்டுத் தரிசையும், வெடித்துக் கிடந்த பூமியையும், மறு மீட்சி கொடுத்து ....'

இது ஒரளவு உத்தேசமான மொழி பெயர்ப்பு தான். இதுவே பூரணமான மொழிபெயர்ப்பு அல்ல.

இன்றைய நவீன கால ஆங்கிலம் (20 ம் நூற்றாண்டில் எழுதி வாசிக்கப்பட்டவாறு) சாஸரின் மொழி அமைப்பிலிருந்து வெகு தூரத்தில் விலகி நிற்கிறது. சாஸரின் மறைவுக்குப் பின் (அதாவது கி.பி. 1400 க்குப் பிறகு) ஆங்கில உயிர் எழுத்துக்களில் (vowels) பெரிய இடமாற்றம் ஏற்பட்டது. எனவே தான், நவீன உச்சரிப்பு, சாஸரின் உச்சரிப்பிலிருந்து மாறுபடுகிறது. ஆயினும், நவீன ஸ்காட்டிஷ் மொழி, சாஸரின் மத்தியக் கால ஆங்கிலத்திற்கு (Middle English) மிக அண்மையில் இருப்பதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர். சாஸர், பல புதிய ஆங்கில வார்த்தைகளை உருவாக்கினார். இது அவரது சாதனை.

சாஸர், பல கவிஞர்களாலும் புகழப்படுகிறார். 17, 18 ம் நூற்றாண்டைச் சேர்ந்த ஜான் டிரைடன், சாஸர் எழுதிய கதைகளைப் பாராட்டுகிறார். சாஸர் மறைந்த 150 ஆண்டுகளுக்குப் பின்பு, அச்சு இயந்திரம் அய்ரோப்பாவில் வில்லியம் கேக்ஸ்டன் அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டு, அந்த இயந்திரத்தில் இங்கிலாந்தில் முதன் முதலாய் அச்சிடத்

தேர்ந்தெடுக்கப்பட்ட சில புத்தகங்களில், சாஸரின் 'கேன்டர்பரி கதைகளும்' ஒன்றாகும்.

**சாஸரின் மொழி :**

சாஸர் எழுதிய பேச்சு வழக்கு ஆங்கிலம், ஆங்கில இலக்கியப் பாரம்பரியத்தின் துவக்க ஊற்றுக்கண் எனப் போற்றப்படுகிறது. அய்ரோப்பாவில் டான்தே உருவாக்கிய பேச்சு மொழி இலக்கியத்தினைப் பின்பற்றி உருவான வரலாற்று ரீதியிலான இலக்கியப் போக்குகளை நிர்ணயிப்பதில், சாஸர் எழுதிய இலக்கியமும் முக்கியத்துவம் வகிக்கிறது.

சாஸர் எழுதிய நூல்களை அவரது மரணத்திற்குப் பின்பு ஒருவரும் அங்கீகரிக்கவில்லை. அவை 19 ம் நூற்றாண்டில் தான் வாசிப்பு வெளிச்சத்திற்கு வந்தன.

கி.பி. 1868 ல் ஃப்ரேடரிக் ஜேம்ஸ் ஃபர்னிவல் என்பவர், சாஸர் சங்கத்தைத் தோற்றுவித்தார். ஆக்ஸ்ஃபோர்டு ஆங்கில அகராதி வெளியீட்டில் முக்கியப் பங்கு வகித்த வால்டர் வில்லியம் ஸ்கீட் என்பவர், சாஸரின் படைப்புகள் யாவற்றுக்குமான விளக்க, வியாக்ஞான வெளியீடுகளை வெளியிட்டார்.

ஜான் ஹெச் ஃபிஷர் மற்றும் லோர்ரி டி. பென்ஸன் ஆகியோர் திருந்திய சாஸர் வியாக்ஞான நூல்களை, விமர்சனக் குறிப்புகள் மற்றும் நூல் குறிப்புகளோடு வெளியிட்டார்கள்.

1966 ல் ஸ்தாபிக்கப்பட்ட '*சாஸர் ரிவ்யூ*' (Chaucer Review) பருவ இதழ், சாஸர் குறித்த கருத்துக்களை வெளியிடுவதில் முதன்மை பெற்று விளங்குகிறது.

**கேன்டர்பரி கதைகள் ( Canterbury Tales )**

ஜெஃப்ரி சாஸர், இந்நூலை 1387 ல் எழுதத் துவங்கினர். இந்நூலுக்கு 57 கைப்பிரதிகள் உள்ளன. இவைகளில் 7 கைப்பிரதித் தொகுதிகள் மாத்திரமே சாஸர்

சங்கத்திற்குக் கிடைத்தது. இவைகளைத் தீர பரிசீலித்துப் பின்னர், திருந்திய படிவம் ஒன்றைத் தேர்ந்தெடுத்தனர். (இது கிட்டத்தட்ட தமிழ்த்தாத்தா உ.வே. சாமிநாத அய்யர் செய்த பழைய ஓலைச் சுவடிகளிலிருந்து தமிழ்ப் புத்தகங்களைப் பதிப்பித்த பணி போன்றதாகும் - மொழிபெயர்ப்பாளர்)

## 'கேன்டர்பரி கதைகளுக்குத் தோற்ற உரை'

இக்கதைகள், ஒரு நல்ல ஏப்ரல் மாத வசந்த காலத்தில் துவங்குகின்றன. சாஸர் துவக்கத்தில் ஏப்ரல் மாத மாரிக் காலத்தினை வருணனை செய்கிறார். மாரிக்காலத்தில் பூவும், இலையும், பிஞ்சுமாக தாவரங்கள் துளிர்த்தன. மரங்களில் பறவைகள் கானம் பாடுகின்றன. இந்நேரத்தில் பக்தர்கள் ஆன்மீக திருத்தல யாத்திரை செல்லத் திட்டமிடுகின்றனர். பல ஆங்கிலேய பக்த கோடிகளும் தூர தேசங்களில் உள்ள புனித திருத்தலங்களுக்குச் செல்ல எண்ணினாலும், சிலர் இங்கிலாந்திலேயே உள்ள கேன்டர்பரி எனும் திருத்தலத்தில் உள்ள பரிசுத்த தாமஸ் பெக்கெட் தேவாலயத்திற்குச் சென்று சேவிக்க எண்ணுகின்றனர். அங்குள்ள, பரிசுத்த தாமஸ் பெக்கெட் எனும் புனிதர், தங்கள் தேவைகளை உணர்ந்து அருள வல்லவர் என அவர்கள் நம்பினர்.

அவ்வாறு புனித யாத்திரை செல்ல எண்ணிய 29 பக்தர்கள் இலண்டன் நகரில், ஸவுத்வார்க் பகுதியில் உள்ள டப்பார்டு சத்திரத்தில் ஒரே நாளில் தங்க நேர்ந்தது. சாஸர் சொல்கிறபடி, அந்த 29 பேர் குழுவில் உள்ளவர்கள், பல திறப்பட்ட மக்கள். எனினும், அவர்கள் கேன்டர்பரி எனும் திருத்தலம் செல்ல எண்ணி ஒரே நேரத்தில், ஒரே இடத்தில் ஒன்று கூடியது தற்செயலாக நிகழ்ந்த ஒன்று தான். அவர்களோடு சாஸரும் சேர்ந்து கொண்டார். அன்றிரவு டப்பார்டு சத்திரத்தில் உறங்கி, மறுநாள் காலை விழித்து, தங்கள் பயணத்தைக் கேன்டர்பரி நோக்கிச் செலுத்த விழைந்தனர்.

அவ்வாறு பிரயாணம் செய்ய விழைந்த 29 பேர் குழுவின் உறுப்பினர்களை, சாஸர் ஒவ்வொன்றாக வருணனை செய்கிறார். இதுவே இந்நூலின் சாராம்சம் ஆகும். அவ்வாறு சாஸர் ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் விளக்கும் போது, அந்தந்த பாத்திரங்களின் தகுதிக்கேற்ப அவர்களை கிரம வரிசைப்படுத்தி வருணிக்கிறார். உதாரணமாக, Knight என்ற பிரபு முதலாவது ஸ்தானம் வகிக்கிறார். துரைமகன் என்ற Squire இரண்டாவது ஸ்தானம். Yeoman எனும் காவலன் (அ) நிலச்சுவான்தார் மூன்றாம் ஸ்தானம். அதன் பின், கன்னியாஸ்திரி, மூன்று ஆச்சாரியர்கள், இளம் துறவி, சந்நியாசி, வணிகன், கல்விமான், வழக்கறிஞன், குடியானவன், தையல் சாமான்கள் விற்பவன், தொய்யான் *, சமையற்காரன், மாலுமி, மருத்துவன் என்று இந்தப் பட்டியல் நீளுகிறது.

செய்தொழில் இழிவில்லை. ஆயினும், அவரவர்களுடைய குணநலன்களை நிர்ணயம் செய்வதில் பல காரணிகள் உள்ளன.

**மரபு மீறல் :**

இந்நூலில் சாஸர், பல இலக்கிய மரபுகளை தகர்த்தெறிகிறார். ஒரு இலக்கியத்தின் துவக்கத்தில், இறை வணக்கம் (invocation) செய்வது மரபு.

இவ்வளவு பெரிய இலக்கியப் படைப்பு எழுதப்பட்டுள்ளது. அதுவும், புனித யாத்திரை போகும் பக்தர்களின் கதைத் தொகுப்பு. இப்படிப்பட்ட நூலுக்கு ‘இறை வணக்கம்' ஒரு படி மேலாக அமைய வேண்டுமல்லவா ? சாஸர் இந்த இறை வணக்க இலக்கிய மரபைத் தகர்த்தெறிகிறார். ஆம். சாஸரின் நூல் இறைவணக்கத்துடன் அல்ல. இயற்கை வணக்கத்துடன் தொடங்குகிறது. ஏப்ரல் மாதத்தில், வசந்த காலத்தின் வருகையை வருணனை

செய்யும் சாஸர், இயற்கை வணக்கமே இறை வணக்கம் என அடிக்குறிப்பு தருகிறாரோ?

அப்படியாயின், இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் எழுதிய

"ஞாயிறு போற்றுதும், ஞாயிறு போற்றுதும்"

என்று சூரிய நமஸ்காரம் செய்வது போல சாஸரும் இயற்கையை வாழ்த்தி, வசந்த காலத்தை வருணிக்கிறாரோ? ஆம். அது அவ்வாறு தான். சாஸர் செய்த மரபு மீறல் ஒரு இலக்கியப் புரட்சி. அத்தோடு அவரது கதாபாத்திரங்களில் சிலரான கன்னியாஸ்திரி. இளம் துறவி, சந்நியாசி ஆகியோர் புனிதமான திருச்சபையைச் சேர்ந்தவர்கள். எனினும், அவர்களுடைய குணநலக் குறைபாட்டைச் சுட்டிக் காட்டவும் சாஸர் தவறவில்லை. கிறித்தவ திருச்சபையில் நடைபெற்ற ஊழல்களையும், அதன் மதத் தலைவர்கள் செய்த அட்டூழியங்களையும் எழுத்தில் மறைமுகமாய்க் கண்டனம் செய்தது சாஸர் செய்த இரண்டாவது புரட்சி. 14ம் நூற்றாண்டில் சாஸர் கண்ணுற்ற போதே பாரம்பரிய கத்தோலிக்கத் திருச்சபை, ஊழல் புரையோடிப் போயிருந்தது என்றால், அது நம்மை வியப்புக்குள்ளாக்குகிறது.

**கேன்டர்பரி திருத்தலம் :**

கேன்டர்பரிக்கு புனித யாத்திரீகர்கள் மேற்கொண்ட யாத்திரை ஒரு தவம் போன்றதாகும். சாஸர் குறிப்பிடுவது போல், 14 ம் நூற்றாண்டில் கேன்டர்பரி திருத்தலம் மிகப் புகழ் பெற்று விளங்கியது. அந்த இடத்தில் கி.பி. 1170 ம் ஆண்டில் பரிசுத்த தாமஸ் பெக்கெட் எனும் தலைமை பிஷப், மன்னர் இரண்டாம் ஹென்றியின் ஆட்களால் படுகொலை செய்யப்பட்டார். இப்படி உயிர்த் தியாகம் (martyr) செய்த பரிசுத்த தாமஸ் பெக்கெட் இறந்து, அடக்கம் செய்யப்பட்ட திருத்தலம் தான் கேன்டர்பரி. அதனால், பெக்கெட்

இங்கிலாந்தில் புகழ்பெற்ற பரிசுத்தரானார். இந்த கேன்டர்பரி பயணம், முற்றிலும் பவித்திரமான, பயபக்தியுள்ள பயணமும் அல்ல. ஏனெனில் இந்தப் பயணம் மக்களுக்கு வேலையில் இருந்து ஓய்வு எடுத்துக் கொண்டு, விடுமுறையாகக் கழிக்கும் வாய்ப்பும் தந்தது.

சாஸர், தான் சந்தித்த 29 நபர்களோடு பேசி, அவர்களைக் குறித்து அறிந்து கொள்கிறார். அந்த நபர்களின் நடை, உடை, பாவனை குறித்து விவரிக்கும் சாஸர், அந்தந்த நபர்களைக் குறித்து, தன் கருத்தையும், விமர்சனத்தையும் பதிவு செய்கிறார். இங்ஙனம் பக்தர்கள் குழுவுக்கும், அதன் பார்வையாளர் குழுவுக்கும் (வாசகர்கள்) இடையில் தான் அமர்ந்து கொண்டு, நேர்முக வருணனை செய்கிறார் சாஸர்.

மத்திய கால சமூகக் கோட்பாட்டின்படி, சமூகம் மூன்று பிரிவுகளை உள்ளடக்கியிருந்தது.

(1) இராணுவம்
(2) மத குருமார் பிரிவு
(3) சாமானிய மக்கள்

இந்த நூலில் வரும் கதாபாத்திர வருணனைகளில்,

பிரபு மற்றும் துரைமகன் ஆகியோர் இராணுவத்தின் பிரதிநிதிகளாக உள்ளனர். கன்னியாஸ்திரி, மூன்று ஆச்சாரியர்கள், இளம் துறவி மற்றும் சந்நியாசி ஆகியோர் மத குருமார் பிரிவின் பிரதிநிதிகளாக உள்ளனர். மற்ற கதாபாத்திரங்களில் குடியானவன் துவங்கி, உழவன் ஈறாக உள்ளவர்கள் சாமானிய மக்களை பிரதிநிதித்துவப்படுத்துகின்றனர்.

**கதாபாத்திரங்களின் குணாம்சங்கள்:**

ஒவ்வொரு கதாபாத்திரத்தின் தன்மையும், மற்ற கதா பாத்திரத்திலிருந்து மாறுபடுகிறது. இந்த குணச்சித்திரப் பன்முகத் தன்மை மிகவும் கூர்ந்து நோக்கத்தக்கது.

உதாரணத்திற்கு, முதல் நபராய் அறிமுகமாகும் பிரபு (Knight) புனித யாத்திரீகர்களில் தலை சிறந்தவர். அவர் இராணுவத் திறமை மிகுந்தவர். அத்தோடு, கண்ணியம், பெருமை, தாராள மனம், உயர் விழுமியம் ஆகியவற்றின் ஒட்டு மொத்த திரட்சி அவர். அப்பிரபு மிகவும் மிருதுவாக, நளினமாக நடந்து கொள்கிறார். யாரைக் குறித்தும் கடின வார்த்தைகள் பேசுவதில்லை. அவரது மகன் துரை மகன் (squire) இருபது வயது நிறைந்த இளம் வாலிபன். அவன் தன் தந்தையைப் போலவே பல போர்க்களங்களிலும் தீரமாய் யுத்தம் பண்ணினவன். ஆயினும், காதலில் ஆழ்ந்தவன். திடகாத்திரமாய், மிகுந்த சௌந்தர்யமுள்ளவன். சுருள் முடித்தலை. பூக்களால் பின்னல் வேலை செய்யப்பட்ட உடைகள். அவன் தன் காதலியின் காதலை வெல்லுவதற்காக போர்க்களங்கள் செல்லுகிறான். அவன் நல்ல காதலன். பாடல் பாடுதல், புல்லாங்குழல் வாசித்தல், ஓவியம் வரைதல், எழுதுதல் மற்றும் குதிரையேற்றம் ஆகியவற்றில் கை தேர்ந்தவன். அவன் காதலில் ஆழ்ந்துள்ளதால், இரவில் தூக்கம் வராமல் தவிக்கிறான். அவன் தன் தந்தையாகிய பிரபுவுக்குக் கடமை தவறாத மகன். சாப்பாட்டு மேசையில் மாமிசத்தை வெட்டித் தருவது அவனே.

அடுத்தபடியாக, கன்னியாஸ்திரியின் கதாபாத்திரத்தை சித்தரிப்பதில், சாஸர் அங்கதத்தைக் கையாளுகிறார். அந்த கன்னியாஸ்திரி அணிந்திருந்த ஜெப மாலையில் இருந்து தொங்கிய தங்க அலங்கார ஊசியில் இருந்த ‘ காதல் உலகையே வெல்லும்' எனும் வாசகம் நல்ல அங்கதம். ஒரு கன்னியாஸ்திரி ‘காதலால் உலகை வெல்லலாம்‘ என்று சொல்வது சாஸரின் எழுத்தின் கூர்மையைக் காட்டுகிறது.

இதைப் போலவே சந்நியாசியின் (The Friar) கதாபாத்திரத்தைச் சித்தரிப்பதிலும் சாஸர் அங்கதம் காட்டுகிறார்.

'அவன் பல இளம் பெண்களின் திருமணங்களை
தன் சொந்த செலவில் நடத்தியுள்ளான்.'

இதில் என்ன அங்கதம்? அந்த சந்நியாசி திருமணம் செய்து வைத்த இளம் பெண்கள் யாவருமே அவனால் ஏற்கனவே சீரழிக்கப்பட்டு, கர்ப்பமாக்கப்பட்டவர்கள். அவனே கர்ப்பமாக்கி விட்டு, பிறகு அவனே தன் சொந்த செலவில் திருமணம் செய்து வைத்து விடுவான் என்பது தான் இதில் உள்ள அங்கதம்.

இவ்வாறாக, சாஸரின் எழுத்து கூர்மையுள்ளது. இக்கதாபாத்திரங்களில் நல்லவர், கெட்டவர் என்ற எளிய பாகுபாடு என்பதை விட, அவை யாவும் தனித்தனியே தெள்ளத் தெளிவாக விலகி நிற்கும் பாத்திரங்கள். யாவரும், தங்களுடைய சமூகத்தில் தங்களுக்குள்ள பாத்திரத்தை உணர்ந்திருப்பதாகக் காட்டிக் கொள்கிறார்கள். ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் உயரிய விதத்தில் சிறப்பாக வருணிக்கிறார் சாஸர். அப்படி வருணிக்கும் போது, ஒரு கதாபாத்திரம் எப்படி இருந்திருக்க வேண்டும் என்றும், ஆனால் அது எப்படி இருக்கிறது என்ற வித்தியாசத்தை வாசகர் உணர்ந்து கொள்ள முடிகிறது.

சாஸரும் இவற்றில் ஒரு கதாபாத்திரமே. அவர் தன்னையும் இவர்களுடன் இணைத்துக் கொள்கிறார். சாஸரின் அங்கதமும், எதிர்மறைக் குறிப்பும் மிகவும் கூர்ந்து நோக்கத்தக்கது. உதாரணத்திற்கு, அந்த இளம் துறவி ( The Monk ) குறித்த விவரணத்தைப் பாருங்கள்.

'... அவன் குதிரையோட்டும் போது,
கடிவாளச் சத்தம் காற்றில் எழுப்பும் ஜல் ஜல் ஓசை
தேவாலய மணி ஓசை போலும் பலமாய் ஒலிக்கும்'

என்ன அருமையான அங்கதக்குறிப்பு !!! அந்த இளம் துறவி இருக்க வேண்டிய இடம் தேவாலயம். ஆனால், அவன் அங்கு இல்லாமல், மனம் போனபடி வீதிகளில் குதிரை ஓட்டிக் கொண்டு அலைகிறான்.

இதை, நாசூக்காக சாஸர் தன் எழுத்தில் சுட்டிக் காட்டுகிறார். இதுவே சாஸரின் எழுத்துத் திறம் !

இந்தக் கதாபாத்திரங்களுக்கு நடுவே கல்விமான் (The Clerk) விவரிக்கப்படுகிறான்.

'அவனது மேல் கோட்டு கிழிந்து நூல் நூலாய் இருந்தது'

என்று சாஸர் குறிப்பிடும் போது, அந்தக் கல்விமான் எந்த அளவுக்கு தரித்திரத்தில் உழன்று கொண்டிருந்தான் என்பது தெரிய வருகிறது. எனினும், இந்தக் கதாபாத்திரத்துக்கு என்ன முக்கியத்துவம் என்று பார்க்கும் போது, மிக மோசமான கதாபாத்திரங்களுக்கு நடுவே இந்த நல்ல பாத்திரத்தை வைத்து ஒரு முரண்பாட்டை ஏற்படுத்திக் காட்ட சாஸர் விழைகிறார் என உணருகிறோம்.

நல்லாரும், அல்லாரும், எளியாரும் எல்லாம் சேர்ந்த கலவையே மனித சமூகம். இதையே சாஸரும் தன் குறிப்பால் காட்டுகிறார். பாத்திரங்களின் பன்முகத் தன்மை, சாஸரின் படைப்பின் திறமை. மேத்யூ அர்னால்டு சாஸரைப் பற்றிக் குறிப்பிடும் போது,

'இங்கே கடவுளின் எண்ணிறந்த சிருஷ்டிகள் தென்படுகின்றன.'

"Here is God's plenty' என்கிறார். இதை விட சாஸருக்கு ஒரு நற்சாட்சிப் பத்திரமும், பாராட்டும் தேவையில்லை.

**கதைகளின் கதை :**

இலண்டன் மாநகரில், ஸவுத்வார்க் பகுதியில் டப்பார்டு சத்திரத்தில் குழுமிய பக்தர் குழு, அன்றிரவு சத்திரத்தில் சாப்பிட்டு விட்டு, அதற்கான கட்டணத்தைச் செலுத்திய பின், சத்திரத்தின் காப்பாளன் அந்தக் குழுவிடம் பேச ஆரம்பிக்கிறான். அவன் அவர்களைச் சத்திரத்திற்கு வரவேற்று, அங்கு வருகை தந்தவர்களுள், அந்த பக்தர் குழுவே சிறந்த மகிழ்ச்சியான குழு என்றும் பாராட்டுகிறான்.

அத்தோடு, கேன்டர்பரிக்கு பிரயாணம் செல்லும் போது, ஒவ்வொரு பிரயாணியும் போகும் வழியில் இரண்டு கதைகளும், வரும் வழியில் இரண்டு கதைகளும் சொல்ல வேண்டும். யார் சிறந்த கதை சொல்கிறார் என்பதை சத்திரக் காப்பாளன் தீர்மானித்து, அவருக்கு ஆகும் ஒரு வேளை உணவுக்கான செலவை, மற்ற பிரயாணிகள் பகிர்ந்து கொள்ள வேண்டும். அத்துடன் தான் அவர்களுக்கு வழித்துணையாகவும், வழி காட்டியாகவும் இருப்பதற்குச் சத்திரக் காப்பாளன் சம்மதிக்கிறான். நல்ல கதைகளைத் தேர்ந்தெடுப்பதில் தான் செய்யும் முடிவை யாராவது சர்ச்சை செய்தால், அப்படி சர்ச்சை செய்பவரே புனித யாத்திரைக்கான மொத்தச் செலவையும் ஏற்க வேண்டும்.

இதற்கு அந்த பக்தர் குழு ஒப்புக் கொண்டு, சத்திரக் காப்பாளனையே அவர்களுடைய நிர்வாகியாக, நீதிபதியாக, ஆவணக் காப்பாளராக நியமிக்கிறது. இரவு சாப்பிட்டதற்கு ஒரு விலையை நிர்ணயம் செய்து செலுத்திய பக்தர்கள், திராட்சை மது அருந்தத் துவங்குகின்றனர்.

மறுநாள் காலை, சத்திரக் காப்பாளன், அவர்கள் யாவரையும் துயில் எழுப்பி, பின் யாவரும் பிரயாணத்தைத் தொடருகின்றனர். திருவுள்ளச் சீட்டு போடப்பட்டு, அதில்

பிரபுவின் (Knight) பெயர் வருகிறது. ஆதலால், முதன் முதலாய் பிரபுவே கதை சொல்லத் தொடங்குகிறார்.

**சத்திரக் காப்பாளன் (The Bailey)**

சத்திரக் காப்பாளன் ஒரு தந்திரமிக்க வணிகன். பக்தர்களிடம் இரவுச் சாப்பாட்டிற்கான பணத்தைக் கறாராக வசூல் செய்த பின்னர், அவன் அவர்களுடைய உற்சாகத்தைப் பாராட்டுகிறான். இந்தப் புனிதப் பிரயாணமே ஒரு கொடுக்கல், வாங்கல் போலாகி விடுகிறது. பக்தர்கள் குழாம், கேன்டர்பரிக்குச் சென்று தாங்கள் பெற்றுக் கொண்ட நன்மைகளுக்காக, அங்கு உள்ள பரிசுத்த தாமஸ் பெக்கெட் சந்நிதியில் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறது. இதைச் சுட்டிக் காட்டும் முகமாக, சத்திரக் காப்பாளன் சொல்லும் வாசகங்கள்

'நீங்கள் கேன்டர்பரிக்குச் செல்கிறீர்கள்.

தேவன் தாமே உங்கள் பிரயாணத்தை துரிதமாக்கட்டும்.

அங்குள்ள ஆசீர்வதிக்கப்பட்ட தியாகி

உங்களுக்கான வெகுமதியைத் திருப்பித் தருவார்.'

இப்படி புனிதப் பயணமும், பண்ட மாற்று முறை போல ஆகி விடுகிறது.

ஒவ்வொரு பக்தரும், பிரயாணத்தின் போது இரண்டு கதைகளைச் சொல்ல வேண்டும். முன்பு கதை சொன்னவரிடம், பின்பு கதை சொல்ல உள்ளவர் கதை (கடன்) சொல்ல வேண்டிய கடனாளி ஆகி விடுகிறார். இவ்வாறாக, ஒவ்வொருவரும் தொடர்ந்து தன் பங்குக்கு

கதைகள் சொல்ல, ஒரு சங்கிலித் தொடர் போல அமைந்து, இந்நூலுக்குத் தொடர்ச்சி அளிக்கிறது.

அத்துடன், இந்தப் பயணத்தின் மூலமாக சத்திரக் காப்பாளனுக்குச் (The Bailey) சில ஆதாயங்களும் கிடைக்கின்றன. கதை சொல்லும் போட்டியில் வென்றவருக்கு, மற்ற பிரயாணிகள் தங்கள் செலவில் சாப்பாடு வாங்கித் தர வேண்டும். அப்படி சாப்பாடு வாங்கித் தரும்போது, அவர்களும் சாப்பிடுவார்கள் என்பதால், சத்திரக் காப்பாளனுக்கு அதிக அளவில் வியாபாரம் ஆகும் என்பதால், அதுவும் வியாபாரத் தந்திரமே.

இந்தக் கதை சொல்லும் போட்டியைத் துவக்கி வைத்த பின், அந்தப் போட்டிக்கு நடுவராக தன்னைத் தானே நியமித்துக் கொள்கிறான், சத்திரக் காப்பாளன். இந்தக் கதை சொல்லும் போட்டியில் பங்கெடுக்க யாவரும் சம்மதித்த பின்பு, அவன் சொல்வதே இறுதித் தீர்ப்பு. அவனது முடிவுக்கு எதிராக யாராவது கருத்து சொல்ல விழைந்தால், அவருக்கு அபராதம் விதிக்கப்படும்.

இவ்வாறாக, கதைகளின் தொகுப்பே ‘கேன்டர்பரி கதைகள்' நூல்

என்றாகிறது. உலக இலக்கியத்தின் தொன்மையையும், இலக்கிய மரபுகளையும் உற்று நோக்கும் போது, அவைகள் யாவும் கதைகளாகவோ அல்லது வேறு பல ரூபங்களில் இருக்கும் கதைகளாகவோ இருக்கும். இந்தியக் கலாச்சார மரபில் இராமாயணமும், மகாபாரதமும் நெடும் கதைகளே. மகாபாரதத்தின் யுத்த பர்வத்தின் ஒரு சிறு கிளைச் சம்பவமும், அங்கு நடந்த நீதி உபதேசமும் பகவத் கீதை ஆகும். கிரேக்கப் புராணத்தில், ஹோமரின் இலியட் மற்றும் ஆடஸி ஆகியவை நெடுங் கதைகளே. பரிசுத்த வேதாகமம் ஒரு நெடிய குழப்பமான புதினம் என்கிறார் டி.எச். லாரன்ஸ்.

கதை சொல்லி மரபு அநேகமாக எல்லா நாடுகளிலும், நாகரீகங்களிலும் உள்ளது. நாடகம் என்பது ஒரு கதையின் மேடை வடிவம், இப்படி உலகம் முழுதும் கதையே பல ரூபங்களில் வடிவம் எடுத்துள்ளது. இந்த இலக்கியத் தொன்மை மரபு, இங்கு சாஸரின் கேன்டர்பரி கதைகளிலும் தொடர்கிறது. உலகம் முழுதும் எங்கேயும், எப்போதும் கதை சொல்லும் இந்த நெடிய மரபு ஏதாவது ஒரு ரூபத்தில் இன்றும் தொடர்ந்து கொண்டு தான் இருக்கிறது.

நவீன ஆங்கில இலக்கியத்தின் பிதாமகரான சாஸரின் ‘கேன்டர்பரி கதைகள்' எனும் இந்தப் படைப்பு, கடல் கடந்து இலக்கியத்தைக் கொண்டு வரும் ஒரு சிறிய முயற்சி.

**H h H**

# 3. கேன்டர்பரி கதைகளுக்குத் தோற்ற உரை

**— ஜெ.ஃப்ரி சாஸர்**

**(கி.பி. 1343 - 1400)**

இங்கே துவங்குகிறது கேன்டர்பரி கதைகள் புத்தகம்.
ஏப்ரல் மாதம் தன் பயனுள்ள மழை நீரால்,
வறண்ட மார்ச் மாதக் கோடைக் காலத் தாவரத்தை
அதன் வேர் வரை ஊடுருவி நனைத்து,
ஒவ்வொரு தாவர நரம்பையும் நீரில் ஊற வைத்து,
மீண்டும் அத்தாவரத்தை உயிர்ப்பித்தும்,
புஷ்பிக்க வைத்தும்,
காட்டுத் தரிசையும், வெடித்துக் கிடந்த பூமியையும்,
மறு மீட்சி கொடுத்து,
இளம் குருத்துகளும், மொட்டுக்களுமாக
உயிர்ச்சி கொடுத்த போது,
சூரியன் மேஷ ராசியில் பாதிப் பிரவேசம் செய்தும்,
இரா முழுக்க திறந்த கண்களோடு
மரங்களில் இருந்த பட்சிகளை
இயற்கை தன் உஷ்ணத்தால் கோபமூட்டி,
அவை இனிய கீதங்கள் பாடியும்
திகழ்ந்த அவ்வமயம்,
பனை ஓலைகளைத் தலையில் சூடிய பக்தர்கள்
பல தேசங்களுக்கும், பல புதிய புண்ணியத்தலங்களுக்கும்
தீர்த்த யாத்திரை செல்ல யத்தனித்தனர்.
இங்கிலாந்தின் எல்லா ஜில்லாக்களின்
மூலைகளில் இருந்தும் வந்தோர்,
சுகவீனப்பட்டிருந்த போது, சொஸ்தம் அளித்த
புனித பரிசுத்தவானின் திருத்தலமாம்
கேன்டர்பரி சென்று சேவிக்க விழைந்தனர்.

அவ்வமயம்,  அந்நாளிலே
ஸௌத்வார்க் அருகே டப்பார்டு சத்திரத்தில்,
பயபக்தியோடு கேன்டர்பரி ஸ்தலத்திற்கு
தீர்த்த யாத்திரை செல்ல, நான் தங்கியிருந்தேன்.
அங்கே சத்திரத்திற்கு, ராவிலே
ஒரே குழுவாய் இருபத்தொன்பது பேர்
ஏதோ ஒரு விதத்தில் ஒன்றிணைந்து வந்து குழுமினர்.
கேன்டர்பரி நகர் நோக்கிப் பயணிக்க,
ஒருமித்த ஐக்கியத்துடன் வந்த பக்தர் குழு அது.
அச்சத்திரத்தில்,

அறைகளும், குதிரை லாயங்களும்
அகன்றவை, விசாலமானவை.

அங்கே, சிறந்த விதத்தில் நாங்கள் ஓய்வு கொண்டோம்.
சிறிது நேரத்தில், சூரியனும், ஓய்வெடுக்கப் போனான்.
அவரோடு, ஒவ்வொருவராய் நான் அளவளாவி
அந்த பக்தர் குழுவில் சங்கமித்தேன்.
வைகறையில் துயில் எழுந்து,
சாலையில் பயணிக்க எண்ணினோம்.
ஆயினும், காலமும், வாய்ப்பும் உள்ளதால்
இக்கதையைத் தொடரு முன்,
யார், யார் எவரெவர் என தகுதியின் பால்,
அவர், அச்சத்திரத்தில் எங்ஙனம் அணிவகுத்தார்,
என அறிமுகம் செய்தல் முறையன்றோ?
ஆதலின், ஒரு பிரபுவைக் குறித்துத் துவங்குகிறேன்.

## பிரபு : (The Knight)

அங்கே அத்திருக்கூட்டத்தில் ,
தகைசால் பிரபு ஒருவர் இருந்தார்.
அப்பிரபு ஆரம்ப காலம் தொட்டு,
உலகை வலம் வந்த வேளையில்,
எளியோரைக் காத்திடவே என்றும் விரும்பினார்.
கடவுளுக்காய் நிகழ்ந்த குருசை யுத்தத்தில்,

அப்பிரபு ,
வாய்மை, பெருமை, ஸ்வதந்திரம், பணிவு
இவை யாவும் கொண்டிருந்தார்.
கிறித்துவப் போர்களிலும், அவர் தம் திறமைக்காய்ப் போற்றப்பட்டார்.
அலெக்ஸாந்திரியாப் போரில் வென்ற போதும்
அவர் அங்கே இருந்தார்.
சகல தேசப் பிரபுக்களும் பிரஷ்யாவில் * பந்தி இருந்த போது,
அவரே விருந்தைத் தலைமையேற்றார்.
லாட்வியப் போரிலும், ரஷ்யாவிலும்
அவர் போன்று போரிட்ட கிறித்தவர் யாரும் இல்லை.
வெற்றி கண்ட கிரானடா முற்றுகைப் போரிலும்,
அல்ஜீரியா, பெல்மாரி, அயாஸ், ஸட்டாலே போர்களிலும்
அப்பிரபு பங்கேற்றார்.
மத்திய தரைக்கடல் போரிலும் இருந்தார்.
மேன்மக்கள் சபையிலும் இருந்தார்.
பயங்கரப் போர்கள் பதினைந்தில் பங்கேற்றார்.
ட்ராமிஸன் எனுமிடத்தில், நம் சமயத்திற்கான போரிலே
மூன்று முறை பங்கேற்றார்.
ஒவ்வோர் முறையும் எதிரியை வீழ்த்தினார்.
பலாத்தே பிரதேச கோமகனுக்காய்
துருக்கியில் கிறித்துவரல்லாதாருடன் போரிட்டார்.
ஒவ்வோர் போர் முடிவிலும் முடியரசில் புகழ் பெற்றார்.
கீர்த்தி உடையார் எனினும், அறிவு நேர்த்தியும் உடையார்.
ஸ்திரீ போல சாதுவானவர்.
யாரிடத்தும், தன் வாழ்நாளில்
வசைச் சொல் ஏதும் உரையார்.
அவர் சிறந்த பண்பான பிரபு.
அவரது அணிவகுப்புத் தோற்றம் குறித்துச் சொன்னால்,
அவரது குதிரைகள் சிறந்தவை ;
ஆயினும், அவர் உல்லாசமானவர் அல்ல.
தற்போது போர்முகம் கண்டு திரும்பியதால்,

வர்ணம் போன யுத்த உடை
மற்றும் மேலுடை உடுத்தியுள்ளார்.
தற்போது தீர்த்த யாத்திரை செல்லவுள்ளார்.

**துரைமகன் (The Squire)**

அப்பிரபுவுடன், அவர் மைந்தன்
இளம் துரைமகன் ஒருவரும் உள்ளார்.
இளம் காதலர். உணர்ச்சி கொண்ட பிரம்மச்சாரி.
அழுத்தி வைக்கப்பட்டது போன்று தோன்றும்
சுருள் கற்றை முடிகள் .
இருபது பிராயம் இருப்பார் என எண்ணுகிறேன்.
சராசரி உயரம்; துடிப்பும் பலமும் கொண்டோன்,
ஃப்ளாண்டர்ஸ், ஆர்த்தோய், பிக்கார்டி பிரதேசங்களில்
குதிரைப் படை நடத்தியவர்.
தன் அரசியின் தயை வேண்டி அச்சிறு இடங்களிலும்
திறமை காட்டியவர்.
நறுக்கிய புதிய வெண்மை, சிவப்பு மலர்களைச் சூடி,
பார்க்க புல்வெளி போலே இருந்தான்.
எப்பொழுதும் பாடுவான் அல்லது குழலூதுவான்.
மே மாத வசந்தம் போலே, புத்தம் புதிதாய் இருந்தான்.
சிறிய மேலங்கி.
நீளமாயும், அகலமாயும் கை வைத்த சிறிய அங்கி,
குதிரையில் நன்கு அமர்ந்து , அழகுற அதை ஓட்டுவான்.
பாடல்கள் புனைந்து, வசனங்கள் இயற்றி ,
கேளிக்கையாய் நடனம் புரிவான்.
ஓவியம் வரைவான் ; எழுதவும் செய்வான்.
இரவில் தன் காதல் குறித்து பேசத் துவங்கினால்,
(காதலின் உஷ்ணத்தால்)
இராப்பாடி பறவையை விட குறைவாய் உறங்கினான்.
பணிவானவன் ; அடக்கமானவன் ; திறமையுள்ளவன்.
தன் தந்தை முன்பாக, சாப்பாட்டு மேஜையில்
அவனே மாமிசத்தை அறுப்பான்.

**காவலன் (அ) நிலச்சுவான்தார் ( Yeoman ) ***
தான் பிரயாணப்படும் போது,
வேறு பணியாட்கள் இன்றிப் போவான் அத்துரைமகன்.
அத்துரை மகனுக்கு , காவலன் ஒருவன் மாத்திரம் உடன் இருந்தான்.
மேல் கோட்டும், பச்சைத் தொப்பியும் அணிந்தவன்.
பிரகாசமுள்ள கூரிய மயிற்பீலி கொண்ட அம்புகள்,
இடைக்கச்சையில் கொண்டவன்.
அந்த அம்புகளில் சிறிய பீலிகள் இல்லை.
அவன் கையில் வலிய வில்.
முடி கத்தரிக்கப்பட்ட தலை ; சூரிய வெம்மையில் தோய்ந்த முகம்.
பயனுள்ள மர வேலைப்பாடுகள் யாவும் அறிவான்.
தினவூட்டும் மதுக்குப்பி ஒரு கையில்.
மற்றொரு கையில் வாளும், கேடகமும்.
மற்றொரு புறத்தில் உறையில் இட்ட,
வேல் போலும் கூர்மையோடு ஒளிரும் குறுவாள்.
மார்பில் வெள்ளிப் பிரகாசமான சிலுவை.
பச்சை நிறக் கொம்பு வாத்தியம் கையில் தாங்கி,
வனாந்திர ஆள் போன்றே தோற்றமளித்தான்.

**கன்னியாஸ்திரி ( The Prioress )**
அக்கூட்டத்தில்,
ஒரு பெண் துறவி ஒருத்தியும் இருந்தாள்.
அவள் சிரிப்பில் நளினமும், வெட்கமும் இருந்தது.
அவள் பேசும் போது,
பரிசுத்த ஏலாய் * துறவியின் மேல் சத்தியம் செய்வாள்.
அவள் நாமம், மாது சிரோன்மணி எக்லான்டின்.
ஆராதனையில் தெய்வீகமாய்ப் பாடுவாள்.
அவள் பாடல் நாசி வழியே ஒலிக்கும்.
ஸ்ட்ராட்.:.போர்ட் பாணியிலான பிரஞ்சு மொழியை
சரளமாயும், சரியாயும் பேசுவாள்.

ஏனெனில், பாரிஸ் நகர் பிரஞ்சு அவள் அறியாள்.
மேஜை நாகரீகம் முழுதும் கற்றவள்.
உண்ணும் போது , உணவு அவள் உதடுகளிலிருந்து உதிராது.
அவள் விரல்கள் குழம்பில் ஆழ மூழ்காது.
தன் மார்பில் சிந்தாதவாறு
தட்டில் உள்ளதை உண்ணுவாள்,
பிறரை மதிப்பதில், ஆர்வமும் மகிழ்ச்சியும் காட்டுவாள்,
திராட்சை ரசக் குவளையின் மேல்
தடம் ஏதும் இல்லாவண்ணம் பானம் அருந்தி,
மேலுதட்டைச் சுத்தமாய்த் துடைத்துக் கொள்வாள்.
மாமிசம் உண்ணும்போது நாகரீகமாய் அணுகுவாள்.
விளையாட்டுக்களில் ஆர்வம் உண்டு.
இனிமையும், இதமான சுபாவமும் உண்டு.
மிடுக்காக, நாகரீகம் தோன்ற அதிக சிரத்தை மேற்கொள்வாள். போற்றுதற்குரியவள் .
அவள் குணநலன் பற்றிச் சொல்லப் போனால்,
தர்ம சிந்தை, இரக்கம் உடையவள்.
ஒரு பொறியில் எலி அகப்பட்டு இறந்தாலோ, ரத்தம் சிந்தினாலோ
அவள் அழுது விடுவாள்.
தன் செல்ல நாய்களுக்கு , வறுத்த மாமிசம்
அல்லது பாலும், வெண்ணிற ரொட்டியும் ஊட்டுவாள்.
நாய் இறந்து போனாலோ அல்லது
யாராவது அதைத் தடியால் அடித்தாலோ அழுது விடுவாள்.
ஏனெனில், அவளது மெல்லிய இருதயம்
இரக்கத்தால் நிரம்பியிருந்தது.
அவளது தலை முக்காடு விசிறி மடிப்போடு அழகாய் இருக்கும்.
அவளது நாசி அழகு ; கண்கள் கண்ணாடி நீலம்.
வாய் சிறியது ; மென்மையானது ; சிவப்பானது.

முன் நெற்றி விசாலம் ; நல்ல அழகு.
உண்மையில், அவள் வளர்ச்சியில் குன்றவில்லை.
அவளது முதுகு மேலங்கி சுத்தமானது.
சிறுமணிகள், பச்சை மணிகளை கிளிஞ்சல்களோடு
கட்டிய வளையலை கையில் அணிவாள்.
அதில் தொங்கும் அலங்கார ஊசி.
அதில் 'A' எனும் எழுத்து
அதன் கீழே வாசகம்.
'காதல் உலகையே வெல்லும்'

**கன்னிகாஸ்திரீ (The nun)**
இன்னொரு கன்னிகாஸ்திரீயும் அவளோடு கூட இருந்தாள்.

**மூன்று ஆச்சாரியர்கள் (The Three Priests)**
அவளுடன் தலைமைக் குருமார் மற்றும்
மூன்று ஆச்சாரியர்கள் இருந்தனர்.

**இளம் துறவி (The Monk)**
அவர்களோடு இளம் துறவி ஒருவன்.
குதிரை ஏற்றத்தில் விருப்பம் உடையவன்.
அதில் உல்லாசம் அடைபவன்.
புருஷ வீரம் நிறைந்தவன்.
மடாதிபதி ஆகும் தகுதி உடையவன்.
நல்ல ரத்த வீர்யமுள்ள குதிரைகள்
அவன் லாயத்தில் இருந்தன.
அவன் குதிரையோட்டும் போது,
கடிவாளச் சத்தம் காற்றில் எழுப்பும் 'ஜல் ஜல்' ஓசை
தேவாலய மணி ஓசை போலும் பலமாய் ஒலிக்கும்.
அத்தேவாலயத்தில், தீரமுள்ள இத்துறவி தங்கியிருந்தான்.
மாரஸ் * அல்லது பரிசுத்த பெனடிக்ட் *
மொழிந்த சமய நெறிகள் பழையன
அல்லது கடுமையானவையாதலால்,

அவைகளைக் கடந்து,
புதிய உலக நடபடிகளை பின்பற்றினான்.
‘வேட்டையாடுவோர் பரிசுத்தவான்கள் அல்ல' என்றும்'
‘மடம் இல்லாத் துறவி நீரற்ற மீன்' என்றும்
சொன்ன மதச் சட்டங்களை அவன் மதியான்.
அச்சமயப் புத்தகத்தை ஒரு பொருட்டாய்க் கருதவில்லை.
என் பார்வையில் அது சரியே !
பரிசுத்த ஆஸ்டின்* சொன்னது போல்
ஏன் அவன் மடத்தினுள் முடங்கி புத்தகம் படிக்க வேண்டும் ?
அல்லது வியர்வை சிந்த கைகளால் பாடுபட வேண்டும் ?
உலகிற்கு பணி செய்வது எவ்வாறு ?
ஆஸ்டின் கொள்கையை அவரோடே வைத்துக் கொள்ளட்டும்.
ஆதலால், நம் துறவி இரவும், பகலும் குதிரை ஓட்டுவான்.
பறவை போல் பறக்கும் சாம்பல் நிற வேட்டை நாய்கள் அவனிடம் உண்டு.
குதிரைச் சவாரி, முயல் வேட்டை இவ்விரண்டும்
அவனுக்குப் பிடித்தம்.
எப்போதும் அதை விட மாட்டான்.
சட்டை மணிக்கட்டில், சாம்பல் நிற மென் மயிர்
வைத்துத் தைக்கப்பட்ட உடை.
தலை முக்காட்டைத் தாடையோடு
மென்மயிர் உரோமத்தால் சேர்ந்திருந்தான்.
அழகிய வேலைப்பாடு உடைய தங்கத்தினால்,
காதல் சின்னம் போல் வளைக்கப்பட்ட
அலங்கார ஊசியால் முக்காட்டைக் குத்தியிருந்தான்.
அவன் தலை வழுக்கை. கண்ணாடி போல் பிரகாசிக்கும்.
முகம் தைல அபிஷேகம் செய்தது போல் மிருதுவானது.
நல்ல தடிமன் ; ஒரே திரட்சியாய் மிடுக்காய் நின்றான்.
அவன் உருண்டை விழிகளை உருட்டிய போது,
அவை பானைக்குக் கீழ் அடுப்பில் உள்ள
எரி தணல்கள் போலே இருந்தன.

அவன் பாதரட்சைகள் மென்மையானவை.
அவன் புரவி உயர் சாதி.
அவன் திண்ணமாக சிறந்த மத குரு.
அவன் ஒரு பிசாசு போல நிறம் வெளிறியவன் அல்ல.
அவன் வறுத்த அன்னப் பறவை மாமிசத்தை
மிக விரும்பினான்.
அவனது குதிரை, பெர்ரி பழம் போல் பழுப்பு நிறத்தில் இருந்தது.

**சந்நியாசி ( The Friar )**

ஒரு உல்லாசம் தேடும் குதூகலமான
சந்நியாசி அங்கு இருந்தான்.
அவன் கொண்டாட்டமாய் வாழ்ந்தான்.
நான்கு சமயப் பிரிவுகளிலும், *
அவனைப் போல பேசுபவனையும்,
புறங்கூறுவோனையும் காண முடியாது.
அவன் பல இளம் பெண்களின் திருமணங்களை
தன் சொந்த செலவில் நடத்தியுள்ளான்.
அவனுடைய பதவியில் அவன் உயர்ந்தவன்.
அவனை விரும்பிய இளம் துறவிகளுடன்
அணுக்கமாய் இருந்தான்.
நகரின் பல பெண்களுடனும் அணுக்கம்.
பாவ மன்னிப்பு தருவதில் ,
உப பாதிரிகளை விட நல்ல லாபம் பெற்றான்.
அவனுக்குப் பாவ மன்னிப்புத் தர அனுமதி இருந்தது.
மிகவும் பண்போடு பாவ அறிக்கைகளைக் கேட்டான்.
அச்சமின்றி, அவைகளை மென்மையாய்ப் போக்கினான்.
பணம் கிடைக்குமென்றால்,
பாவங்களுக்குப் பிராயச்சித்தம் செய்வான்.
யாசகம் கேட்கும் துறவியிடம் பணம் கொடுத்தால்,
ஒரு மனிதன் பாவ நிவாரணம் அடைவானன்றோ?

இத்துறவி சொன்னான் :
'ஒருவன் காணிக்கை தந்தால்,
அவனது பாவ மன்னிப்பைப் பிழையாக ஏற்கவில்லை.
ஏனெனில், பல கடின இருதய முள்ளவர்கள் உள்ளனர்.
அந்தக் கடின இதயமுள்ளவர்கள் அழ இயலாது.
எனவே, அழுவது, ஜெபிப்பது, இவற்றை விட
வறிய துறவிகளுக்கு யாசகம் தர வேண்டும்.
அவனுடைய கழுத்தைச் சுற்றிய உரோமப் பட்டையில்
சிறு கத்திகளும், ஊசிகளும் தொங்கும்.
அவன் அவைகளை இளம் மனைவியருக்குத் தருவான்.
அவர்களை மகிழ்ச்சிப்படுத்துவான்.
பாடியும், இசைத்தும் மகிழ்வாய் இருப்பான்.
கதைப் போட்டியில் பரிசைத் தட்டிச் செல்வான்.
அவன் கழுத்து மே மாத லீலி புஷ்பம்
போலே வெண்மையாய் இருக்கும்
அவன் பந்தய வீரன் போலே திடமாய் இருந்தான்.
அவனுக்குப் பிச்சையெடுக்கும் குஷ்ட ரோகிகளைத் தெரியாது.
ஆனால், நகரில் உள்ள மதுக்கடைகள் அனைத்தும் அறிவான்.
அங்குள்ள பணிப்பெண்களையும் அறிவான்.
அவனைப் போன்ற முழுமையான மனிதன்,
குஷ்டரோகிகளிடம் தொடர்பு கொள்ள இசைய மாட்டான்.
அத்தகைய சொறி நாய்களிடம் தொடர்பு கொண்டு
யாதொரு பலாபலனும் இல்லை.
பெரிய, பணக்கார மது விடுதி உரிமையாளர்கள்,
அத்தகையோரிடம் தொடர்பு கொள்ளட்டும்.
எங்கு பண வரவு உண்டோ, அங்கே அத்துறவி மனுஷர் கண் முன்பு,
பணிவும், பண்பும் காட்டுவான்.

(அச்சமயங்களில்) அவனைப் போன்ற உத்தமன் யாருமில்லை.
ஒரு ஜில்லா முழுக்க அவன் கட்டுப்படுத்தி,
அதில் யாசகம் பெற்றுக் கொண்டிருந்தான்.
அந்தப் பிரதேசத்தின் விளிம்பைக் கூட,
வேறோரு துறவி தொடக் கூட முடியாது.
கால் ஜோடுகள் வாங்க வசதியற்ற விதவையிடமும்,
அவன் கொள்கை உறுதி கொண்டவன்.
அவளை விட்டு அகலும் முன், ஒரு நாணயமாவது,
யாசகம் வாங்கி விடுவான்.
எந்தச் சிறு நாய்க்குட்டியிடமும் விளையாடுவான்.
அவைகளின் காதல் தினங்களில்,
அவனால் சிறு உதவி செய்ய இயலும்.
கந்தலான அங்கி அணியும் எளிய மாணவன் போல,
அவன் மடாலயத்தைச் சேர்ந்த எளியவன் அல்ல.
அவன் பிரபு போலவோ, போப்பாண்டவர் போலவோ
இரட்டை உடுப்பு மேலங்கி அணிந்திருப்பான்.
அது ஒரு மணி போல வட்டமாய் இருக்கும்.
வேண்டுமென்றே , ஆங்கிலத்தை மிருதுவாய்
மழலை நடையில் பேசினான்.
பாடல் பாடி முடித்து, யாழ் மீட்டும் போது,
அவனது இரு விழிகள்,
பனிக்கால இரவின் விண்மீன்கள் போலே ஒளிரும்.
இந்த உயரிய மனிதன் பெயர் ஹீபர்ட் என்பதாகும்.

## வணிகன் ( The Merchant )

அக்கூட்டத்தில் ,
பிளவுண்ட தாடியும், கனமான சரீரமும்
உள்ள வணிகன் ஒருவன் இருந்தான்.
அவன் பல வண்ண மேலங்கி உடுத்தி
உயரமான குதிரையில் அமர்ந்திருந்தான்.
பீவர் மிருக ரோமத்தாலான தொப்பி அணிந்திருந்தான்.

அவனது கால் சராய் நேர்த்தியாய்க் கட்டப்பட்டிருந்தது.
தன் வெற்றிகள் பற்றி மட்டும் (தோல்விகள் தவிர்த்து)
பகட்டாய் படாடோபமாய்ப் பேசினான்.
மிட்டில்பர்க் துவங்கி ஆர்வெல் நகர் வரை,
கடலைக் கூட கட்டி நிறுத்தி விடுவான்.
பணப் பரிமாற்றத்தில் பெருந்தொகை சம்பாதிப்பான்.
தன் அறிவுத் திறனை மேம்படுத்தி வைத்திருந்தான்.
அவன் கடன் பட்டதாய் ஒருவரும் சொல்ல இயலாது.
தன் வியாபாரங்களில், பேரம் பேசுதல், கொள்முதல் பெறுதல்,
பங்கு முதலீடு யாவும் திறம்பட நிர்வகிப்பான்.
அவன் மொத்தத்தில் திறமைசாலி.
உண்மையாய், அவன் பெயர் அறியேன் யான்.

**கல்விமான் ( The clerk )**
ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழக மாணவன் ஒருவனும்
எங்களுடன் இருந்தான்.
பல காலம் முன்பே அறிவு பெற,
கல்வி கற்கத் தொடங்கியவன்,
தூர் வாரும் குச்சி போல மெலிந்த குதிரை
ஒன்று வைத்திருந்தான்.
நான் உறுதியாய்ச் சொல்வேன், அவன்
குண்டானவன் அல்ல.
ஆனால், உள்ளே ஒடுங்கிய அமைதியானவனாய் இருந்தான்.
அவனது மேல்கோட்டு கிழிந்து, நூல் நூலாய் இருந்தது.
அவனுக்கு திருச்சபையிலிருந்து உதவி ஏதும் வரவில்லை.
ஒரு வேலையில் அமரும் உலக இயல்பும் அவனிடம் இல்லை.
கருப்பும், சிவப்புமாய் மேலட்டை போட்ட,
அரிஸ்டாட்டில் தத்துவப் புத்தகங்கள் இருபது ,
எப்போதும் அவன் படுக்கை தலைமாட்டில் இருந்தது.

அவனிடம் உயர்ந்த ஆடைகளோ,
பிடில் வாத்தியமோ, கீர்த்தனைப் புத்தகமோ இல்லை.
அவன் பெட்டியில் குறைவான பணமே இருந்தது.
தன் தோழனிடம் கடன் வாங்கிய பணத்தில்,
சீக்கிரத்திலேயே புத்தகங்கள் வாங்கிப் படித்துச் செலவழிப்பான்.
பிற்பாடு,
தனக்குப் பணம் தந்த ஆத்மாக்களுக்காக ஜெபம் பண்ணுவான்.
படிப்பில் கவனம் கொள்வான்.
தேவையின்றி ஒரு வார்த்தை கூட அதிகம் பேசாதவன்.
அந்த வார்த்தையையும், துரிதமாய் முழு அர்த்தத்தில்,
மரியாதையாய் உரைப்பான்.
அவன் பேச்சில் நன்னெறி ஒழுக்கம் நிறைந்திருக்கும்.
உற்சாகமாய்க் கற்று, குதூகலமாய் அதை போதிப்பான்.

**வழக்கறிஞன் ( The Lawyer )**

அறிவார்ந்த சட்ட வல்லுனன் ஒருவன் இருந்தான்.
அவன் பால் சதுக்கத்திற்கு அடிக்கடி சென்று
சட்ட ஆலோசனை வழங்குவான்.
அவனிடம் தொழில் திறம் உண்டு
மிகுந்த புத்தி ஜாக்கிரதையுண்டு.
பிறரிடம் மரியாதை உண்டு.
(அல்லது அவ்வாறு பாசாங்கு செய்வான்)
அவனது வார்த்தைகள் அறிவு நிரம்பியவை.

அவனது கல்வி மற்றும் புகழுக்காக,
அவ்வப்போது மன்னரின் கட்டளைக்கேற்ப,
நடமாடும் நீதிமன்றத்தின் நீதிபதியாக அவன் அமர்த்தப்பட்டான்.
அவனிடம் நீதிமன்ற உடுப்புகள் நிறைய உண்டு.

அவனைப் போல் யாரும் கொள்முதல் செய்ய இயலாது.
அதிகமான சம்பளம் பெறுவான்.
அது எளிய தொகை தான் என்று சொல்வான்.
அவனது கருத்துக்களைச் சந்தேகிக்க இயலாது.
அவனது தொழிலில் அவனைப் போன்று,
பணி மிகுந்த ஆள் இல்லை,
ஆயினும், அதை விட மிகுந்த பணி இருப்பது போல் தோற்றமளித்தான்.
மன்னர் வில்லியம் காலத்திய வழக்குகளையும் ,
முன் தீர்ப்புகளையும் மேற்கோள் காட்டுவான்.
ஒப்பந்த வரைவுகளைத் தெளிவாக எழுதுவான்.
யாரும் அதில் குறை காண இயலாது.
எல்லாச் சட்டங்களையும் விபரமாய் எடுத்துரைப்பான்.
பல கலவையான நிறங்களில் மேலங்கி அணிந்து,
சிறு சிறு பட்டைகளால் இணைந்த
பட்டினால் ஆன இடைக்கச்சை அணிந்து குதிரையில் வருகிறான்.
அவன் உடை குறித்து இதற்கு மேல் சொல்ல இயலாது.

**குடியானவன் ( The Franklin )**

அவனுடன் ஒரு குடியானவன் இருந்தான்.
வெண் மலர் போல வெண் தாடி.
உற்சாகமாய்த் தோன்றினான், எல்லா விதத்திலும்.
காலையில் திராட்சை மது அருந்த விரும்பினான்.
மகிழ்வோடு வாழ்வதே லட்சியமெனக் கொண்டு, அதை அடைந்தான்.
எபிக்யூரஸின் * பிள்ளை அவன்.
'பூரண ஆனந்தமே முழு வாழ்வு' என்றான்.
நல்ல குடும்பத் தலைவன்.
அவனுடைய பிரதேசத்தில் அவனே பரிசுத்த ஜீலியன்*
அவனுடைய அப்பமும், பானமும் மிக நேர்த்தியானவை.

அவனிடம் இருந்தது போல்,
மது பீப்பாய்கள் வைக்கும் நிலவறை யாரிடமும் இல்லை.
சமைத்த மாமிசத்திற்கு அவன் வீட்டில் தட்டுப்பாடு
எப்போதும் இல்லை.
மீனும், மாமிசமும் அபரிவிதமாய் இருந்தது.
உணவும், பானமும், எண்ணற்ற பலகாரங்கள்
யாவும் அங்கே மிகுதியாய் இருந்தன.
பருவ காலத்திற்கேற்ப உணவுகளை மாற்றினான்.
பல கொழுத்த பறவைகளை பஞ்சாரத்தில் அடைத்து
வைத்திருந்தான்.
நிறைய மீன்களைத் தொட்டியில் வைத்திருந்தான்.
சாப்பாட்டில் சாறு, குழம்புகள் சுவையின்றி இருந்தாலோ,
சமையல் தளவாடங்கள் ஆயத்தமின்றி இருந்தாலோ,
அவனது சமையற்காரனுக்குக் கஷ்ட காலம் தான்.
வீட்டின் மைய அறையில்,
சாப்பாட்டு மேசை மூடப்பட்டு , எப்போதும் தயாராய் இருக்கும்.
கிராம விருந்துகளில் அவனே பிரபு
மற்றும் தந்தை ஸ்தானம் வகிப்பான்.
அவன் அந்த ஜில்லாவுக்கு கோமகன் போன்றவன்.
ஒரு குறு வாளும், அற்பமான பட்டுத்துணிப் பையும்,
பால் போன்ற வெண்ணிற இடுப்புக் கச்சையிலிருந்து
தொங்கிக் கொண்டிருந்தது.
அவன் காவல் அதிகாரியாகவும், கணக்காளராகவும் பணி
செய்துள்ளான்.
அவனைப் போன்ற சிறந்த குடியானவன் எங்கும் இல்லை.

## தையல் சாமான் விற்பவன் மற்றும் தச்சன்
## ( The Haberdasher and the carpenter )

அந்தக் கூட்டத்தில் தையல் சாமான் விற்பவனும்,
தச்சனும் இருந்தார்கள்.

**நெசவாளி, சாயம் போடுபவன், தொய்யான் ***
**( The Weaver, the Dyer and the arras - maker )**

திரைச் சீலைகள் செய்யும் தொய்யான்,
சாயம் போடுபவன் மற்றும் நெசவாளி எங்களுடன் இருந்தனர்.
ஒரே மனோபாவமும், ஒரே தொழிலும் செய்பவர்கள்.
அவர்களது தளவாடங்கள் புதியன ; சீரானவை.
அவர்களது தளவாடங்கள் வெண்கலத்தால் பூசப்படாமல் ,
வெள்ளிப் பூச்சு உடையன.
நேர்த்தியாய்ச் செய்த தளவாடங்கள்.
அவர்களது இடைக் கச்சையும், பைகளும் அவ்வாறே.
ஒவ்வொருவனும் நகர மன்றத்தில்,
உயர் இருக்கையில் அமரும் தகுதியோடு,
முழுமையான கைவினைஞனாகத் தோன்றினான்.
ஒவ்வொருவனும் ஞானத்தில் மூத்தவனாய் இருந்தான்.
அசையும் சொத்துக்கள் ஏராளம் வைத்திருந்தனர்.
தங்கள் மனைவியர் சம்மதத்தோடு அவைகளை
வாடகைக்கும் விட்டனர்.
'மாது சிரோன்மணி' என்று அழைக்கப்படுதலும்,
மேலங்கியை ராஜரீகமாக உடுத்தி , தேவாலயம் செல்லும்போது,
உலகனைத்தும் பார்ப்பது பெருமையன்றோ ?

**சமையல்காரன் ( The cook )**

தங்கள் தேவைக்காக ஒரு சமையல்காரனை வைத்திருந்தனர்.
அவன் கோழியை, எலும்பு மஜ்ஜையோடு
சுவைபட, நறுமணமாய் சமைத்திடுவான்.
இலண்டன் நகர மதுவை சுவை கண்டறிந்திடுவான்.
வறுத்தும், வதக்கியும், கிளறியும், பொறித்தும்
சுவை மிகு கெட்டிக் குழம்புகளும், பண்ணியமும் செய்திடுவான்.
அவன் முழங்காலுக்குக் கீழே, சொறி சிரங்கு இருந்தது.
பார்க்க மோசமான வியாதியாய் இருந்தது.
அச்சமையல்காரன்,

இனிய பழவகை உணவுகள் சிறப்பாய்ச் செய்திடுவான்.

**மாலுமி ( The Sailor )**

அங்கு மேற்குப் பகுதியின்,
டார்ட்மவுத் நகரிலிருந்து மாலுமி ஒருவன் வந்திருந்தான்.
நீள, முரட்டு அங்கி முழங்கால் வரை அணிந்து,
வாடகைக் குதிரையில் சவாரி வந்தான்.
கழுத்தில் இருந்த ஒரு பட்டையிலிருந்து
சிறு கத்தி ஒன்று தொங்கியது.
கையின் கீழும் ஒரு கத்தி.
தாழ்வாய் இன்னொரு கத்தி.
கோடை வெம்மை அவன் முகத்தை ,
பழுப்பு நிறமாய் மாற்றியிருந்தது.
அவன் ஒரு நல்ல மனுஷன்.
போர்தோ நகரில் தயாரான மதுவை,
கடைக்காரன் உறங்கும் சமயம் எடுத்து விடுவான்.
நல்ல மனசாட்சி எதுவும் அவனிடம் கிடையாது.
போரில் வெற்றி பெற்றால், சிறைப் பிடித்தவர்களை
தூர தேசங்களுக்குக் கடத்தி விடுவான்.
கப்பல் படை நுட்பத்தைப் பொறுத்தமட்டில்,
அவன் ஓதங்களையும், ஆபத்தான நீரின் வேகங்களையும் அறிவான்.
துறைமுகங்கள், நிலவினை ஆராய்ந்து கலம் செலுத்துதல்,
இவற்றில் ஹல் துறைமுகம் துவங்கி கார்த்தேஜ் வரை
அவனைப் போல் யாரும் இல்லை.
திடமானவன். செய் வினையில் அறிவுடன் இருப்பான்.
பல புயல்களிலும் அசைக்கப்பட்டவன்.
காட்லேண்ட் துவங்கி ஃபினிஸ்டர் முனை வரை,
சகல புகலிடங்களும் அத்துபடி.
பிரிட்டனி துவங்கி ஸ்பெயின் வரை,

எல்லாக் கழிமுகமும் அறிவான்.
அவனது கப்பலின் பெயர் மேதலீன்.

**மருத்துவன் ( The Physician )**

எங்களுடன் மருத்துவன் ஒருவனும் இருந்தான்.
இவ்வுலகில், மருந்துகள், ரண சிகிச்சை குறித்து,
அவனைப் போல் பேச யாரும் இயலாது.
ஏனெனில், வானவியல் நிபுணன் அவன்.
தன்னிடம் வரும் சோகை பிடித்த நோயாளிக்கு,
ஜாதகப்படியும், மாய வித்தை மூலமும் சிகிச்சை தருவான்.
நோயாளி ஒருவனின் அதிர்ஷ்டம் எப்போது உயரும்
என கணிப்பான்.
உஷ்ணமோ, குளிரோ, ஈரமோ, உலர்வோ
நோய் எங்கு உள்ளது, எத்தன்மை
என அதன் மூலமும் அறிவான்.
அவன் நல்ல மருந்தாளுனன்.
நோய் நாடி, நோய் முதல் நாடி,
உடனே நோயாளியை காலால் எட்டி உதைப்பான்.
மருந்து விற்பவர்கள், அவனுக்காய்த் தயாராய் இருப்பர்.
அவர்களுடன் பரஸ்பர உடன்பாட்டின் படி,
நல்ல லாபம் சம்பாதிப்பான்.
அவர்களது நெருங்கிய உறவு புதிதாய் வந்ததல்ல.
எஸ்குலாப்பியஸ், * தெய்ஸ்கோரைட்ஸ், ரூ∴பஸ்,
ஹிப்போக்ரைட்டிஸ், ஹலி, கேலன், ஸெராபியன்,
ரேஸஸ், அவிஸென், அவெரோஸ், கில்பெர்ட்,
கான்ஸ்டான்டைன், பெர்னாட், கேட்டிஸ்டென்,
ஜான் டமஸ்ஸீன் * என யாவரையும் கற்றான்.
சத்தான எளிய உணவு,
அளவோடு உண்பான் ; மிகையாக உண்ணான்.
விவிலியம் மிகக் குறைவாக வாசித்துள்ளான்.
பட்டுத் துணி ஜரிகை இழைத்த

நீலமும், கருஞ் சிவப்புமான உடை உடுப்பான்.
ஆயினும், செலவினங்களில் கவனமாய் இருப்பான்.
கொள்ளை நோய் வந்த போது, பணம் சம்பாதித்தான்.
ஏனெனில், மருந்து விற்ற பணம், இருதயத்தை வலுப்படுத்தும் பானம்.
ஆதலால், மற்றதை விட பணத்தை நேசித்தான்.

**பாத் நகரப் பெண் ( The wife of Bath )**

பாத் நகரிலிருந்து அல்லது அதன் அருகிலிருந்து
பெண்ணொருத்தி வந்திருந்தாள்.
அவள் இரு காதுகளும் கேளாத செவிடு.
துணி நெசவில் அவளுக்கு மிகுந்த ஆர்வம்.
அய்ப்ரஸ் மற்றும் கென்ட் பிரதேசத் துணிகளை விட
பிரமாதமாய் நெய்வாள்.
திருச்சபையில் அவளை விட எந்தப் பெண்ணும்,
அதிக காணிக்கை தந்து, என் வாழ்நாளில் கண்டதில்லை.
அப்படி யாரும் தந்து விட்டால், அப்பெண் கோபமுறுவாள்.
உடனே காணிக்கை தருவதை நிறுத்தி விடுவாள்.
அவளது கைக்குட்டைகள் நல்ல துணியில்
அருமையாய் நெய்யப்பட்டவை.
ஞாயிறு அன்று அவள் தலையில் அணியும் துணி
பத்து பவுண்டு எடை எனச் சத்தியமாய்ச் சொல்லுகிறேன்.
அவளது காலுறை தேர்ந்த கருஞ்சிவப்பு நிறம்.
நல்ல வாரினால் நெருக்கி இழுத்துக் கட்டப்பட்டவை.
கால் சராய்கள் மென்மையும், புதிதுமானவை.
அழகிய, தைரிய முகம் ; சிவப்பு நிறம்.
வாழ்நாள் முழுக்க சொத்துக்கள் வைத்திருந்தவள்
அவளுக்கு அய்ந்து கணவர்கள் திருச்சபையில் உண்டு.
அவர்கள் மகிழ்ச்சியும், சச்சரவும் உண்டாக்கினர்.
இது போக இளைஞர் குழாம் ஒன்று அவளுக்கு நெருக்கம்.

அது குறித்துப் பேசத் தேவையில்லை.
எருசலேம் நகருக்கு மும்முறை சென்றவள்.
பல அந்நிய தேசங்கள் கண்டவள்.
ரோம் சென்றாள். போலோன் சென்றாள்.
ஸ்பெயினில் ஸான்டியாகோவுக்குச் சென்றாள்.
கொலோன் நகருக்குச் சென்றாள்.
தன் பிரயாணம் குறித்து விவரிப்பாள்.
பல் வரிசையில் இடைவெளி உண்டு.
ஒரு குதிரை மேல் அமர்ந்திருந்தாள்.
தலையை நன்கு முக்காடிட்டு, அதன் மேல்
கேடயம் அளவு அகலத் தொப்பி அணிந்திருந்தாள்.
பிருஷ்ட பாகத்தை கனத்த கம்பளி கொண்டு கட்டியிருந்தாள்.
கால் சராய் நுனியில் கூர் ஆணிகள்.
பிறர் குறித்து அவதூறு பேசிச் சிரிப்பாள்.
காதல் நிவாரணிகள் அறிந்தவள்.
வசியம் செய்யும் அப்பழங்கலை,
ஒரு வேளை அறிந்திருக்கலாம்.

## பாதிரி ( The Parson )

அங்கு பக்தியுள்ள நல்ல மனுஷன் ஒருவன் இருந்தான்.
அவன் ஏழைக் கிராம பாதிரி என
நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.
ஆயினும், பரிசுத்த எண்ணத்தில், செயலில் நிறைந்தவன்.
நன்கு கற்ற மனிதனும் கூட .
கிறிஸ்துவின் சுவிசேஷத்தை உண்மையாய் போதிக்க விழைந்தான்.
தன் திருச்சபைக்குப் பக்தியோடு போதிப்பான்.
நல்லெண்ணமும், ஊக்கமும் உள்ளவன்.
கஷ்ட காலங்களில் பொறுமையாய் இருந்து,
மன அமைதியோடு இருப்பான்.
பல சமயங்களிலும் சந்தோஷமாய்

இருந்து காட்டியுள்ளான்.
சாபமிட்டு , தசம பாக காணிக்கை பெறுவதை
அவன் வெறுத்தான்.
மாறாக, வறிய திருச்சபையினருக்கு,
தன் வருமானத்தில் ஒரு பகுதியையும்,
தன் பொருட்களையும் எடுத்துத் தருவான்.
போதுமென்ற மனதோடு எப்போதும் இருந்தான்.
அவன் திருச்சபைப் பிரதேசம் நெடுந்தொலைவு அகன்றது.
எனினும், மழையோ, இடியோ, நோயோ, பாவ வீழ்ச்சியோ,
எவ்வாறு இருப்பினும்,
சிறிய வீடோ, பெரிய வீடோ,
தானே எல்லா வீடுகளுக்கும் செல்வான்.
கையில் தடி ஏந்தி, நடந்தே செல்வான்.
தான் வழி நடந்து, பின் உபதேசித்து,
தன் திருச்சபை மக்களுக்கு முன் உதாரணம் காட்டினான்.
ஒரு வேதாகம வசனம் மேற்கோள் காட்டி,
அத்துடன் தன் கருத்தும் சேர்த்து,
‘தங்கமே துருப்பிடித்தால், பாவம் இரும்பு என்ன செய்யும் ?
போதகனே மோசம் எனில் , யாரிடம் நம்பிக்கை வைப்பது ?
சாமானியன் காமத்தில் வீழ்வதில் என்ன ஆச்சரியம் ?
ஒரு அசுத்த மேய்ப்பன், சுத்த ஆடுகளை மேய்க்க
எண்ணுதல் அவமானம்.
தன் பரிசுத்தத்தில், தன் மந்தைக்கு
போதகன் வழி காட்ட வேண்டும்' என்பான்.
தன் தேவ ஊழியத்தைப் பிறரிடம் ஒப்படைக்க மாட்டான்.
தன் திருச்சபையைச் சேற்றில் மூழ்க விட்டு,
இலண்டன் சென்று, பரிசுத்த பவுல் ஆலயத்தில்
ஆன்மாக்களுக்கு ஜெபிக்க விரும்பாதவன்.
அல்லது வேறொரு ஐக்கியத்தில் சேர விழையான்.
தன் திருச்சபையிலே இருந்து,

ஓநாய்கள் தன் திட்டங்களைக் குலைக்காதவாறு காப்பாற்றுவான்.
அவன் மேய்ப்பன் ; கூலியாள் அல்ல .
பரிசுத்தமும், ஒழுக்கமும் கொண்டவன்.
பாவிகளிடம் கடிந்தும், அதிக தெய்வீகமாயும் பேசாதவன்.
விவேகமும், கிருபையுமாய்ப் போதித்து,
தன் மந்தையை நல் உதாரணம் காட்டி,
அதைப் பரலோகம் சேர்ப்பதே அவன் தொழில் .
ஆனால், சில பாவிகள் முரட்டுத்தனமாய் இருந்தால்,
யாராயிருந்தாலும், உயர்ந்தவரோ, தாழ்ந்தவரோ
அவன் கடுமையாய் கண்டிப்பான் என உறுதியாய்ச் சொல்கிறேன்.
ஆடம்பரம், புகழ் விரும்பாதவன்.
தான் மேம்பட்டவன் என செருக்கு கொள்ளாதவன்.
கிறிஸ்துவின் ஜீவிதத்தையும், அப்போஸ்தலர் பன்னிருவர் குறித்தும், உபதேசித்தான்.
ஆனால், அவனே முதலில் பின்பற்றினான்.

## உழவன் ( The Plowman )

அந்த உபதேசியின் சகோதரன், ஒரு உழவனும் இருந்தான், நல்ல உழைப்பாளி ;
ஆதலால், சுமை சுமையாய் வயலுக்கு எரு இடுவான்.
அமைதியாக வாழ்ந்து, பரோபகாரம் செய்தான்.
விளையாடினாலும், உழவுத் தொழில் செய்தாலும்,
முழு இருதயத்தோடு தேவனில் அன்பு கூர்ந்தான்.
தன்னைப் போலவே, அண்டை அயலாரையும் அன்பு கூர்ந்தான்.
கிறிஸ்துவின் நிமித்தம்
அநியாயமாய்ப் பணம் சேர்க்க எண்ணாமல்,
ஏழை எளியோருக்கு தன்னால் இயன்ற அளவு, ஊதியமின்றி,
தானியங்களைப் போர் அடித்தும், நிலத்தை சீர்படுத்தியும் தருவான்.
தன் உழைப்பாலும், தான் விற்றவற்றில் வரும் பணத்திலும்,

முழுமையாய், உண்மையாய் வரி செலுத்துவான்.
அவன், ஒரு பெண் குதிரையில் சத்திரத்திற்கு வந்தான்.
அங்கு ஒரு நீதித்துறை அதிகாரி, அரவைத் தொழிலாளி
திருச்சபை ஊழியர்கள், பாவ மன்னிப்புச் சீட்டு விற்பவன்,
சாமான்கள் பராமரிக்கும் மேற்பார்வையாளன் யாவருடன்
நானும் அங்கு இருந்தேன்.

**அரவைத் தொழிலாளி ( The Miller )**

அரவைத் தொழிலாளி, குண்டான நாட்டுப்புறத்தான்.
கட்டு மஸ்தான, நீண்ட எலும்புகள் வலுவாக உடையவன்.
அங்கு குதிரை மீதேறி அவன் வரும்போது அது தெரிந்தது.
மல் யுத்தத்தில் ஆட்டைப் பரிசாக அடையத் தவற மாட்டான்.
கனமான, அகன்ற சரீரமுள்ள மனுஷன்.
ஒரு கதவை, அதன் கீலோடு பெயர்த்து எறிந்திடுவான்.
அல்லது அதைத் தலையால் முட்டி உடைத்திடுவான்.
அவன் தாடி, பன்றி அல்லது நரியைப் போன்று சிவந்தது.
மண்வெட்டி போல அகன்றது.
அவன் மூக்கின் சரிவில் தடித்த கட்டி இருந்தது.
அதன் மேல் கொத்தாய்,
குச்சி, குச்சியாய் தடிப்பான உரோமங்கள் இருந்தன்.
அவை கிழட்டுப் பன்றியின் காது உரோமங்கள்
போலே சிவந்திருந்தன.
நாசி கருமையும், விசாலமும் உடையது.
தன் பக்கத்தில் வாளும், கேடகமும் வைத்திருந்தான்.
அவன் வாய் உலையின் மூடி போன்று இருந்தது.
அவன் விதூஷகன் ; கவி பாடுவான்.
ஆனால், யாவும் பாவமும், காமமும் நிறைந்த கதைகள்.
தன் ஆலைக்கு வரும் சோளத்தில் திருடிக் கொள்வான்.
அரவைக்கு மும்மடங்கு கட்டணம் வசூலிப்பான்.
ஆயினும், என்ன ஆச்சரியம் !
தன் விரல்களால் மாவின் தரம் சோதிக்கும் திறமைசாலி.

வெண்ணிற மேல் உடுப்பும், நீலத் தலைப்பாகையும் உடுத்தியுள்ளான்.
தோல் பை வாத்தியம் வாசிக்க வல்லான்.
அதை வாசித்த வண்ணம், எங்களை,
நகருக்கு வெளியே கொண்டு வந்தான்.

**மேற்பார்வையாளன் ( The Manciple )**

அங்கு நீதிமன்றத்திலிருந்து வந்த
மேற்பார்வையாளன் ஒருவன் இருந்தான்.
உணவும், பானமும் கொள்முதல் செய்வோர்,
அவனிடம் அதைக் கற்றுக் கொள்ள வருவர்.
பணம் கொடுத்து வாங்குவானோ,அல்லது
கொடுக்காமல் வாங்குவானோ,
எப்போது வாங்கலாம் என்று
சந்தை நிலவரம் குறித்து நன்கு அறிவான்.
ஒரு போதும் அவன் இழந்து போனதில்லை.
இப்படி ஒரு கீழ்மையான பிறவி, அறிவுடையோர் கூட்டத்தை
மிஞ்சியது கடவுளின் கிருபையில் அல்லவா?
அவனது எஜமானர்கள் முப்பதுக்கும் மேல்.
யாவருமே சட்ட வல்லுநர்கள்.
அதில் பன்னிருவர் நிலம், வீடு சொத்துக்களை
நிர்வகித்து, எந்த ஒரு இங்கிலாந்து பிரபுவும்,
(அவன் மூடனாய் இல்லாத பட்சத்தில்)
கௌரவமாய் வாழ வழி செய்வர்.
அல்லது எளிய சிக்கன வாழ்வுக்கு உதவுவர்.
ஒரு ஜில்லா முழுமைக்கும் உதவும் இந்நிபுணர்கள்.
இந்த மேற்பார்வையாளன்,
அவர்கள் யாவரையும் ஏமாற்றி, வஞ்சித்து விடுவான்.

**உக்கிராணக்காரன் ( The Reeve )**

நீதித்துறை அதிகாரி, ஒல்லியான சிடுமூஞ்சிக்காரன்.
தன் கத்தியால் முடிந்த அளவு தாடியை மழித்திருந்தான்.

காது வரை தலைமுடியை வெட்டியிருந்தான்.
பிரசங்கி போல் தலையை மழித்திருந்தான்.
நீளமான, ஒல்லியான, குச்சி போன்ற கால்கள்.
அவைகளில் ஆடுசதையே இல்லை.
களஞ்சியத்தைச் சிறப்பாகப் பராமரித்திடுவான்.
எந்த கணக்காயனும் அவனை ஜெயிக்க இயலாது .
வறட்சி, மழையை வைத்து
விளைச்சலைக் கணித்திடுவான்.
தன் எஜமானனின் குதிரைகள், ஆடுகள், எருதுகள், மாடுகள்
யாவும் இவன் மேற்பார்வையில்.
தன் எஜமானனின் இருபது வயது பிராயம் முதலே
ஊழியம் செய்கிறான்.
எனினும், ஏதேனும் பொருள் குறைபாடு நேர்ந்ததில்லை .
அவனை ஊழியக்காரர்களோ, கால்நடை பராமரிப்பவனோ
ஏமாற்ற இயலாது,
அனைவரின் தந்திரங்களையும் உக்கிராணக்காரன் அறிவான்.
ஆனால், உக்கிராணக்காரன் கணக்காயனை ஏமாற்றி விடுவான்.
மரணத்தைக் கண்டது போல் அவனைக் கண்டு அஞ்சினர்.
நல்ல புதர் அடர்ந்த இடத்தில் இருந்த அவன் வீடு,
பச்சை மரங்களால் நிழல் பெற்றது.
தன் எஜமானனை விட திறமையாய்க் கொள்முதல் செய்வான்.

## திருச்சபை ஊழியன் ( The Summoner )

ஒரு திருச்சபை ஊழியன், எங்களுடன் அவ்விடம் இருந்தான்.
நன்கு சிவந்த, உருண்ட முகம் அவனுக்கு.
ஏனெனில், அவனுக்கு தோல் வியாதி உண்டு.
நீண்டு குவிந்த கண்கள்.
சிட்டுக்குருவி போல வெப்பமும், காமமும் உடையவன்.
கருத்த, சொறி சிரங்குள்ள புருவமும், குறுந்தாடியும் கொண்டவன்.
அவன் முகம் கண்டு குழந்தைகள் பயப்படுவர்.

அவன் முகப்பருக்கள், வெண் புள்ளிகளை
பாதரசம், கந்தகம், சூரணம், போரக்ஸ் பொடி
டார்டாரிக் அமிலம் அல்லது களிம்பு கொண்டு
சுத்தப்படுத்திப் போக்க முடியாது.
அல்லது அவன் கன்னத் தோல் தடிப்புகளை போக்க முடியாது.
பூண்டு, வெங்காயம் இத்யாதிகளை விரும்பி உண்பான்.
ரத்தச் சிவப்பான, திராட்சை மது அருந்துவான்.
பின், பைத்தியம் போல் ஏதாவது உளறி, சத்தமிடுவான்.
மது அருந்தி விட்டால் இலத்தீன் தவிர
வேறெதுவும் பேச மாட்டான். *
ஏதாவது திருச்சபை நீதிமன்ற * உத்தரவில் கண்ட
இரண்டு, மூன்று சொற்றொடர் மாத்திரம் பேசுவான்.
இவைகளை நாளெல்லாம் படித்துக் கற்றான்.
ஒரு சிறு பறவை கூட 'வாட்' என சத்தமிடும்.
அதைப் போலவே போப்பாண்டவரும் சத்தமிடுவார்.
இத்திருச்சபை ஊழியனை,
வேறு விஷயம் ஏதும் பேச வைக்க இயலாது.
அவன் முழுதும் கற்ற தத்துவம்,
'சட்டம் என்ன என்று கேட்கிறேன் '*
என இலத்தீன் மொழியில் சத்தமிடுவது தான்.

அவன் ஒரு விதமானவன் ; உயர்ந்த அயோக்கியன்.
அவனைப் போல் வேறொருவனைப் பார்ப்பது அரிது.
ஒரு லிட்டர் மது கொடுத்தால்,
யாருக்கும் தன் சக்களத்தியை, ஒரு வருடத்திற்கு
முழுதாய் விட்டுக் கொடுத்து விடுவான்.
(இருப்பினும், நம்மிடையே , ஒரு கௌதாரி பறவையைப்
பெற்றுக் கொண்டு, அதற்காக விட்டுக் கொடுப்பான்.)
ஒரு நல்ல மனுஷனை யதேச்சையாய்ச் சந்தித்தால்,
தன்னிடம் பயப்பட வேண்டாம் என்பான்.
அச்சமயத்தில், ஒருவனின் ஆன்மா
தலைமைப் பாதிரியின் சாபத்திலிருந்து தப்பிப்பது,

அவனுடைய பணப் பையைப் பொறுத்தது.
ஒரு மனிதனின் தண்டனை, அவன் பணப்பையில்
முடிந்து விட வேண்டும்.
‘ஒரு பணப் பையே தலைமைப் பாதிரியின் நரகம்' என்பான்.
அவன் சொல்வது பொய் என அறிவேன் நான்.
எல்லாக் குற்றவாளியும் சாபத்திற்குப் பயப்பட வேண்டும்.
(சாபம் கொல்லும் ; பாவ மன்னிப்பு ரட்சிக்கும் ).
ஒருவனின் மரண தண்டனைக்கு உத்திரவிடும் அதிகாரம்
அவன் வசம் இருந்தது.
திருச்சபையின் யுவன், யுவதிகளின் ரகசியங்கள் அறிந்து,
அவர்களைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பான்.
அவர்களை வழி நடத்துவான்.
தன் தலையில் பூமாலை சூடியிருந்தான்.
அது, சத்திரத்தின் கம்பத்தில் முளைத்த
திராட்சைக் கொடிப் புதர் போலே இருந்தது.
ரொட்டியால் செய்த கேடகத்தை கையில் வைத்திருந்தான்.

**பாவ மன்னிப்புச் சீட்டு விற்பவன் ( The Pardoner )**

அந்த திருச்சபை ஊழியனோடு, அவன் நண்பன்
பாவ மன்னிப்புச் சீட்டு விற்பவனும் பயணித்தான்.
அவன் ரௌன்ஸிவல் புனித மேரி சபையைச் சேர்ந்தவன்.
ரோம் திருச்சபையிலிருந்து நேரே வந்திருந்தான்.
‘வந்திடுவாய் இங்கு. என்னோடு காதல் செய்'
எனச் சத்தமாய்ப் பாட்டுப் பாடினான்.
அதில், அவன் நண்பனும் இணைந்து பாடினான்.
ஆனால், அதில் பாதி அளவு ஸ்தாயி கூட இல்லை.
இந்தச் சீட்டு விற்பவன், மஞ்சள் மெழுகு போல் முடி
வைத்திருந்தான்.
அவன் ரோமம், இழை இழையாய் நீண்டு கவர்ச்சியற்று இருந்தது.
அவை, திரி திரியாய், சடை சடையாய்த் தலையில் தொங்கின.
அத்துடன் அவன் தோள் மீதும் படர்ந்திருந்தன.

சுத்தமற்று, அவை தலையில் இருந்து வழிந்தன.
அவன் தலைப்பாகை அணிய வில்லை.
அதைக் கைப்பைக்குள் வைத்திருந்தான்.
அவன் நவ நாகரீகமாய் இருந்தான்.
தொப்பி தவிர எல்லாம் கலைந்திருந்தது.
முயல் போலும் ஒளிரும் கண்கள் .
அழகான வெரோனிக்கா புஷ்பம் ஒன்றைத்
தொப்பியுடன் சேர்த்து குத்தியிருந்தான்.
அவன் கைப்பை மடியில் தொங்கியது.
அதில் ரோமில் இருந்து கொணர்ந்த
புதிய பாவ மன்னிப்புச் சீட்டுக்கள் * நிரம்பியிருந்தன.
அவன் குரல் வெள்ளாட்டின் குரல் போல் இருந்தது.
முகத்தில் தாடி இல்லை ; அவன் தாடி வைக்கவும் கூடாது.
சவரம் செய்தது போல் முகம் மிருதுவாய் இருந்தது.
அவன் காயடிக்கப்பட்ட ஆண் குதிரை அல்லது
பெண் புரவி போல் இருந்தான்.
செய்தொழிலைப் பொறுத்தமட்டில்,
பெர்விக் துவங்கி வேயர் வரை, அவனைப் போன்று
திறமையான பணிக்காரன் எங்கும் இல்லை.
அவன் பையில், சிறிய தலையணை உண்டு.
அதில், நம் மரியாளின் முகத்திரையை வைத்திருந்தான்.

அத்துடன், பரிசுத்த பேதுரு படகில் சென்று மனம் கலங்கிய போது,
இயேசு அவன் மனத்தை திடப்படுத்திய போது,
அப்படகின் பாய்மரத் துணியின் ஒரு பாகம் வைத்திருந்தான்.
உயர் மணிகள் பதித்த நீளக் குருசை * ஒன்று இருந்தது.
ஒரு குப்பியில் பன்றி எலும்புகள்.
இப்பொருட்களுடன், இவ்வூழியன்
ஒரு பாதிரியைச் சந்தித்தால்,
அந்தப் பாதிரி இரு மாதங்களில் சம்பாதிப்பதை,
ஒரே நாளில் சம்பாதித்திடுவான்.

முகஸ்துதி செய்து, ஹாஸ்யம் பேசி,
பாதிரியையும், மற்றவரையும் குரங்கு போல் தலையாட்ட வைப்பான்.
கடைசியாக, ஒரு உண்மையைச் சொன்னால்,
அவன் திருச்சபையில் நல்ல பிரசங்கி.
அவன் ஒரு அத்தியாயம் அல்லது கதையை வாசிப்பான்.
எல்லாவற்றையும் விட ஒரு பாமாலை பாடுவான்.
அவன் நன்கு அறிவான்.
அப் பாமாலை பாடினால்,
உதடுகளால் நளினமாய்ப் பிரசங்கரிக்க வேண்டும்.
பின் வெள்ளிப் பணம் வசூலிக்க வேண்டும்.
ஆதலால், அவன் குதூகலமாய்ச் சத்தமாய்ப் பாடுவான்.

**தோற்ற உரை**

இது காறும், ஸவுத்வார்க் டப்பார்டு சத்திரம்
எனும் உயரிய உறைவிடத்தில்,
மணிக்கூண்டு அருகே கூடிய பக்தர் குழுவின்
தோற்றம், எண்ணிக்கை, அமைப்பு, நோக்கம் பற்றி
சுருக்கமாய் உங்களுக்கு உரைத்தேன்.
தற்போது, இரவில் அங்கே வந்த நாங்கள்,
என்ன செய்தோம் எனச் சொல்கிறேன்.
எங்களின் இணைந்த புனிதப் பயணத்தில்,
பிற்பாடு என் கதைகளைத் தொடருகிறேன்.
முதலில், உங்களிடம் மரியாதையோடு கூறுவது யாதெனில்,
எங்கள் குழுவின் பேச்சுக்களையும், மகிழ்ச்சியையும்
உள்ளது உள்ளவாறு பொய்யின்றிச் சொல்கிறேன்.
அதை அநாகரீகமெனக் கருத வேண்டாம்.
ஒருவன் கதை சொல்லுங்கால் ,
அதில் உண்மை விபரங்களை கூடிய மட்டில்
உள்ளது உள்ளவாறு நினைவு கூற நேர்ந்தால்,

ஒவ்வொரு வார்த்தையையும்,
(அது மூர்க்கமாய், சொல்லத் தகுதியற்றதாய் உள்ள போதிலும்)
சொல்ல வேண்டும் என நீங்களும், நானும் அறிவோம்.
இல்லையெனில், வார்த்தை ஜோடனையாக, கற்பனையில், உண்மையற்றதை அவன் சொல்லக் கூடும்.
தன் சகோதரனாய் இருப்பினும், சொல்ல விட்டு விடக் கூடாது.
அவன் ஒரு வார்த்தைக்குப் பதில், மற்றதைச் சொல்லலாம்.
கிறிஸ்துவானவர், பரிசுத்த வேதாகமத்தில்
பட்டவர்த்தனமாய்ப் பேசினார் என அறிவீர்கள்.
அதில் ஒரு தாழ்வும் இல்லை.
கற்றோருக்குப் பிளாட்டோ * சொல்லும் மொழி :
"வார்த்தை செயலுக்கு அத்தான் போல இருக்க வேண்டும்."
அத்துடன், இம்மாந்தரை அவர் தம் தகுதிப்படி
இக்கதையில் வரிசைப்படுத்தாது இருந்திருப்பின்,
என்னை மன்னிக்க வேண்டும்.
என் அறிவுத்திறன் சிறந்ததன்று என அறிவீர்கள்.

சத்திரக்காரன், எங்களை மகிழ்ச்சிப்படுத்தி சிறந்த உணவுகள் தந்தான்.
யாவரும் மகிழ, திடமான திராட்சை மது தந்தான்.
மொத்தத்தில் மிகுந்த மரியாதையான ஆள்,
விருந்து அரங்கில் தலைமை ஆளாக இருக்கத் தகுந்தவன்.
பெரிய சரீரம் ; துருத்தும் கண்கள்.
சீப்ஸைட் பிரதேச பிரஜை போலிருந்தான்.
தைரியமான பேச்சு. அறிவார்ந்தவன்.
சீரிய முறையில் கல்வி கற்றவன்.
புருஷ லட்சணத்தில் குறைவே இல்லை.
அத்துடன் உற்சாகமான மனுஷன் அவன்.
உணவு உண்டு, அதன் தொகை செலுத்திய பின்,
இசை மீட்டிய போது, பேசியவைகளில்

மகிழ்வான விஷயங்களைப் பேசினான்.
அப்போது அவர் :
"என் எஜமானர்களே! உண்மை பகர்ந்தால்,
இங்கு, இவ்வருஷம், சத்திரத்திற்கு வந்தவர்களில்,
இது போன்ற ஒரு கோஷ்டியை நான் கண்டதே இல்லை.
இது பொய்யில்லை.
இதை விட வேடிக்கை விளையாட்டுக்குத் தருணம் வந்ததில்லை.
உங்களை மகிழ்ச்சிப்படுத்துதல் என் மகிழ்ச்சி.
அது எவ்வாறென அறிவேன் நான்.
இப்போது ஒரு விளையாட்டு குறித்து எண்ணினேன்.
அது உங்களுக்கு சந்தோஷம் தரும். செலவு தராது.
நீங்கள் கேன்டர்பரிக்குச் செல்கிறீர்கள்.
தேவன் தாமே உங்கள் பயணத்தைத் துரிதமாக்கட்டும்.
அங்குள்ள ஆசீர்வதிக்கப்பட்ட தியாகி,
உங்களுக்கான வெகுமதியைத் திருப்பித் தருவார்.
நீங்கள் போகும் வழியில், நல்ல கதைகள் சொல்லி,
இசை பாடிச் செல்வீர்கள் என அறிவேன்.
சாலையில், ஒரு கல்லைப் போல (உணர்வற்றுப்)
பயணம் செய்வதில் மகிழ்வும், இதமும் இல்லை.
ஆதலின், உங்களுக்கு ஒரு விளையாட்டை அறிமுகப்படுத்துகிறேன்.

இப்போது நான் சொன்னதை ஏக மனதாய் ஏற்றுக் கொண்டால்,
நாளை நாம் பயணிக்கும் போது, உங்களுக்கு இதம் கிடைக்கும்.
என் சொல் படி நடந்து, என் தீர்ப்புக்குக் கட்டுப்படுவீர்கள்.
உங்களுக்கு இதில் திருப்தி இல்லையெனில்,
கைகளை உயர்த்துங்கள் ; மேற்கொண்டு நான் பேசவில்லை.
எங்கள் சம்மதம் தர நெடு நேரம் ஆகவில்லை.

ஏனெனில், அதில் இரு தரம் சிந்திக்கக் காரணம் இல்லை.
நாங்கள் நிபந்தனை இன்றி, அவன் சொன்னது ஏற்று,
அவன் தீர்ப்புக்களை நியாயமாயும், புத்திப்பூர்வமாயும் தர வேண்டினோம்.
சத்திரக்காரன் சொன்னதாவது :
''என் எஜமானர்களே ! என் ஆலோசனை இதுவே.
ஆனால், அதை இகழ வேண்டாம் என வேண்டுகிறேன்.
சுருங்கித், தெளிவாய்ச் சொன்னால், இதுவே விஷயம்.
பொழுதை இனிதே போக்க, கேன்டர்பரி செல்லும் வழியில்,
நீங்கள் ஒவ்வொருவரும் இரு கதைகள் சொல்லுவீர்.
அவ்வண்ணமே திரும்பி வரும் போதும், இரு கதைகள் சொல்லுவீர்.
ஒருவனின் அனைத்து சாகசங்களையும் உரைக்கலாம்.
இதில், யார் சிறந்த விதத்தில் தன் பங்கைச் செய்கிறாரோ,
அதாவது, யார் பயணத்தில்,
சிறந்த கதைகளைச் சுவைபடச் சொல்கிறாரோ,
அவர் பிறர் செலவில் இரவு உணவு சாப்பிடலாம்.
இதோ, இந்தத் தூண் அருகே, இவ்வறையில்,
இப்போது உங்களுக்கு உத்தரவாதம் தருகிறேன்.
நானே என் செலவில் மகிழ்வோடு பயணித்து,
உங்கள் வழிகாட்டியாய் இருப்பேன்,
என் கருத்தை மறுப்பவர்,
வழிச் செலவு அனைத்தும் ஏற்க வேண்டும்.
இதை, இவ்வண்ணமாய் ஏற்றால் சொல்வீர் உடனே,
இல்லையெனில் மறுப்பீர்.
அதன் பின், நான் ஏதும் செய்வதில்லை.''
அவன் சொன்னது ஏற்கப்பட்டது.
முழு சம்மதத்துடன் எங்கள் உறுதிமொழி தரப்பட்டது.
அத்துடன், அவன் எங்கள் இரவு உணவை
ஒரு குறிப்பிட்ட கட்டணத்தில் ஏற்பாடு செய்தான்.

ஆதலின், எங்களை நிர்வகிக்கும் பொறுப்பை ஏற்று,
எங்கள் கதைகளை மதிப்பீடு செய்து,
சிறிய, பெரிய காரியங்களில்
எங்கள் ஒவ்வொருவர் சம்மதத்துடன் ,
அவன், எங்களை நிர்வகிக்க ஒப்புக் கொண்டோம்.
அதன் நிமித்தம், திராட்சை மது உடனே கொணர்ந்து,
நாங்கள் பருகி, பின் அனைவரும் ஓய்வு கொண்டோம்.
மறு நாள் காலை, புலர்ந்த பொழுதில்,
எங்கள் சத்திரக்காரன் எங்களுக்கு முன்பாக எழுந்து,
எங்களைச் சேவல் போலே எழுப்பி,
ஒரு அணியாய்த் திரட்டி, துரித நடையில் முன்னேறி,
பரிசுத்த தாமஸ் தண்ணீர் நிலை அடைந்து,
அங்கு சத்திரக்காரன், குதிரைகளை மெதுவான நடையில் விட்டு, எங்களிடம் சொன்னதாவது :
"என் எஜமானர்களே ! நான் கூறுவது கேட்பீர்!
காலையின் சங்கீர்த்தனமும், மாலையின் சங்கீர்த்தனமும் ஒன்றெனில்,
யார் முதலில் கதை சொல்வது என முடிவு செய்வோம்.
நான் அதிக திராட்சை மதுவும், பானமும் குடிக்கத் திட்டமிட்டுள்ளதால் ,
என் அதிகாரத்திற்கு எதிராய் யார் பேசினாலும்,
அவரே என் வழிச் செலவு (மதுவின் செலவு உள்பட) முழுதும் ஏற்க வேண்டும்.
இங்கு வருவீர் ! திருவுளச் சீட்டுகள் எடுப்பீர் !
நம்மில் யார் கடைசி எனக் காணுமுன்,
யார் முதல் பெயரோ அவர் துவங்கட்டும்.
மேன்மையுள்ள பிரபுவே ! என் எஜமான் ! என் அய்யா !
நீரே உம் வார்த்தையின் படி , முதல் சீட்டை எடுப்பீர் !
அருகில் வருக, கன்னியாஸ்திரியே!
அடுத்து, நீங்கள், கூச்சம் நிறைந்த கல்விமானே !
சிந்தனை வேண்டாம் யாவரும் நீட்டுவீர் கையை !"

உடனே, ஒவ்வொருவராய்ச் சீட்டு எடுத்தனர்.
அங்கு நிகழ்ந்ததைச் சுருக்கிச் சொன்னால்,
மெய்யாகவே, சந்தர்ப்பத்தாலோ, தற்செயலாகவோ,
முதல் சீட்டு பிரபுவின் பெயருக்கு விழுந்தது.
யாவரும் அப்போது மகிழ்ந்தனர்.
ஆதலின், ஒப்பந்தப்படி, அவர் பெயருக்கு விழுந்ததால்,
அவரே முதலில் கதை சொல்ல வேண்டும்,
என நீங்கள் அறிவீர்களே !
இழுபறியாய், விவாதம் எதற்கு இன்னும் ?
இந்த நல்ல மனுஷன் (பிரபு) இவ்வண்ணம் நிகழ்ந்ததால்,
புத்தியும், கீழ்ப்படிதலும் கொண்டிருந்த படியால்,
தான் தந்த வாக்கின்படி முழு ஒப்புதல் தந்தான்.
பிரபு சொன்னது :
"திருவுளச்சீட்டின்படி நானே துவங்க உள்ளதால்,
அதை தேவனின் நாமத்தில் வரவேற்கிறேன்.
நாம் பயணிப்போம் ; நான் கூறுவது கேட்பீர் ! "
அவ்வார்த்தையின்படி, நாங்கள் எங்கள் வழியில் பயணம்

தொடர்ந்தோம்.
பிரபுவும், நல்ல குதூகலமாய், உடனே மொழிந்த கதை
உள்ளது, உள்ளவாறு இங்கு எழுதப்படுகிறது.
கேன்டர்பரி கதைகளுக்குத் தோற்ற உரை, இங்கு நிறைவுற்று,
பிரபு சொன்ன முதல் கதை இங்கே தொடங்குகிறது.

--------

## மேற்குறிப்புகள்

1. பிரஷ்யா - பழங்காலத்தில் ஜெர்மனியை உள்ளடக்கிய பேரரசு. பல நூற்றாண்டுகளாய் ஜெர்மனி மற்றும் அய்ரோப்பிய வரலாற்றில் குறிப்பிட்ட

| | | | |
|---|---|---|---|
| | | | தாக்கத்தை உண்டு பண்ணிய பேரரசு. கி.பி. 13 ம் நூற்றாண்டு முதல் கி.பி. 1932 வரை இப்பேரரசு இருந்தது. |
| 2. | காவலன் (அ) நிலச் சுவான்தார் | - | மூல நூலில் Yeoman என்று உள்ளது. |
| 3. | பரிசுத்த ஏலாய் | - | St Eloy. 7 ம் நூற்றாண்டைச் சேர்ந்த கிறித்துவ துறவி, பொற்கொல்லர், கொல்லர் ஆகியோரின் காவல் துறவி எனக் கருதப்படுபவர். |
| 4. | மாரஸ் | - | பரிசுத்த மாரஸ். St Maurus. 9ம் நூற்றாண்டு கிறித்துவத் துறவி பரிசுத்த பெனடிக்டின் சிஷ்யர். பல அற்புதங்கள் செய்தவர். |
| 5. | பரிசுத்த பெனடிக்ட் | - | (கி.பி. 480 – 547) கி.பி. 5 மற்றும் 6 ம் நூற்றாண்டில் வாழ்ந்த ரோமன் கத்தோலிக்கத் துறவி இவர் அய்ரோப்பாவின் உபகாரியான பரிசுத்தர் என கத்தோலிக்க திருச்சபை 1964 ல் அறிவித்தது. |
| 6. | பரிசுத்த ஆஸ்டின் | - | கி.பி. 354 – 430. பரிசுத்த அகஸ்டின் என்றும் அழைக்கப் பட்டார். அல்ஜீரியாவில் வாழ்ந்த தலைமைப் பாதிரி. மேற்கத்திய கிறித்துவ சமயத்தின் ஸ்தாபகர். |
| 7. | நான்கு சமயப் பிரிவுகளிலும் | - | கத்தோலிக்க திருச்சபையின் நான்கு முக்கிய பிரிவுகள் |

| | | | |
|---|---|---|---|
| 8. | எபிக்யூரஸ் | - | கி.மு. 341 – 270. கிரேக்க தத்துவவாதி. 300 புத்தகங்கள் அவர் எழுதியுள்ளார். அமைதியான, சுதந்திரமான வாழ்வே இனிமையானது. மரணம் வாழ்வின் இறுதி. கடவுள் மனிதனுக்கு ஆசிகளும், நன்மைகளும் தருவதில்லை என்ற கோட்பாடு உடையவர். |
| 9. | பரிசுத்த ஜீலியன் | - | St Julian. கி.பி. 4 ம் நூற்றாண்டு சித்திரவதை செய்யப்பட்டு, கொல்லப்பட்ட கிறித்துவத் துறவி. |
| 10. | எஸ்குலாப்பியஸ் … டமஸ்ஸீன் | - | இந்த நெடும் பட்டியலில கண்டுள்ளவர்கள் யாவரும் மருத்துவ நிபுணர்கள். மருத்துவ உலகின் மாமேதைகள். |
| 11. | இலத்தீன் தவிர வேறெதுவும் பேச மாட்டான்* | - | சாஸர் வாழ்ந்த 14 ம் நூற்றாண்டிலும், அதற்குப் பிற்பாடு வந்த காலங்களிலும், இங்கிலாந்தில் இலத்தீன் மற்றும் பிரஞ்சு மொழி பேசுவது பெருமையாகவும், கௌரவமாகவும் கருதப்பட்டிருக்க வேண்டும். |
| 12. | திருச்சபை நீதிமன்ற (Ecclesiastical courts) | - | பழைய கத்தோலிக்கத் திருச்சபையில், குடும்ப விவகாரங்களையும், பாலியல் |

| | | |
|---|---|---|
| | | ஒழுக்க விஷயங்களைக் குறித்தும் விசாரணை செய்யும் மத நீதிமன்றம். |
| 13. | சட்டம் என்ன என்று கேட்கிறேன் | - மூல நூலில் ‘Questio quid juris' என்ற இலத்தீன் வாக்கியம் உள்ளது. இதன் தோராயமான மொழிபெயர்ப்பே இது. Question, what is the law? |
| 14. | பாவமன்னிப்புச் சீட்டுகள் ( Pardons ; indulgence ) | - பாரம்பரிய ரோமன் கத்தோலிக்கத் திருச்சபையில், பாதிரிகள் பாவ மன்னிப்புச் சீட்டு என்ற அட்டையை திருச்சபைக்குள்ளேயே விற்று வந்தனர். ஒரு அட்டையில் ‘உன் பாவங்கள் மன்னிக்கப் பட்டன‘ என்று எழுதப் பட்டிருக்கும். இதன் மூலம், கத்தோலிக்க சபையின் குருமார்கள் , கொள்ளை கொள்ளையாய்ப் பணம் சம்பாதித்தனர். இவ்வழக்கம் தற்போது இல்லை. |
| 15. | குருசை | - ஆங்கிலத்தில் cross என்று பொருள்படும் இந்த வார்த்தைக்குச் சிலுவை என்றும் அர்த்தம் உண்டு. எருசலேம் நகரை மீட்க நடைபெற்ற புனிதப் போர்களை குருசை யுத்தம் அல்லது |

சிலுவை யுத்தம் என்று அழைப்பது வழக்கம்.

16. பிளாட்டோ - கி.மு. 5 மற்றும் 4 ம் நூற்றாண்டில் வாழ்ந்த கிரேக்கத் தத்துவ ஆசிரியர். சாக்ரடீசின் சிஷ்யர்.



---

தொய்யான்* — — — டெய்லர் ( Tailor )

---

# பாகம் - II

## ‘பெண் துறவி உடனிருந்த இளம் துறவி சொன்ன கதை'

-- ஜெ.ஃ.ப்ரி  சாஸர்

## (மொழி பெயர்ப்பு)

## (Nun's Priest's Tale)

## (A Translation)

**By  Geoffrey  Chaucer**

**மூலம் - ஜெ.ஃ.ப்ரி  சாஸர்**

**தமிழில் - எஸ்.  ரமேஷ்**

# ‘பெண் துறவி உடனிருந்த இளம் துறவி சொன்ன கதை'

## பாகம் - II

### பெண் துறவி உடனிருந்த இளம் துறவி சொன்ன கதை

'' நிறுத்து உன் கதையை, '' என்றான் இள வீரன்
''நல்லவனே! இனி மேலும் இக்கதை வேண்டாம்,
நீ சொன்னது போதும். இதுவே அதிகம்.
சொன்ன விஷயமே நமக்கு அதிகமானது.
தாங்க இயலாதது என எண்ணுகிறேன்.
என்னைப் பொறுத்தவரை இது துக்கமானது.
நான் சொல்வதைக் கேட்க எண்ணினால், இது உரைப்பேன்.
பெருஞ் செல்வமும், சௌகரியமும் துய்த்த சிலர்,
திடீர் வீழ்ச்சி அடைவது கண்டால், அய்யோ!
ஆயினும், இதே நிகழ்வு தலைகீழாய் இருந்தால்
அது இன்பமும், ஆறுதலும் தருமல்லவா?
தாழ்மை நிலையில் உள்ளவன்
செல்வத்தால் உயர்ந்து, சிறந்து
ஐசுவரியத்தில் திளைப்பது, எத்துணை சந்தோஷமானது !?
அது காணச் சுகமானது.
அவ்விஷயங்கள் விவரிக்க இனியன.''
''ஆம்,'' என ஆமோதித்த விருந்தளிப்போன்,
''அப்போஸ்தலனாகிய பவுலின்[1] பெரிய மணி மீது
சத்தியமாய் நீ உண்மையைச் சொல்கிறாய்.
இந்தத் துறவியின் நாக்கு உரத்து சப்தமிடுகிறது.
அவன், அதிர்ஷ்டம் எப்படி ஒரு மேகத்தால்
மூடி மறைக்கப்பட்டது என்றான்.
அது என்னவென அறியேன்.

இப்போது கேட்ட வண்ணமே, துன்பியல் கதை குறித்து,
நீ சொன்ன துக்க நிகழ்வுகள் குறித்து,
துக்கித்தலும், திகைப்புறுதலும், முறையிடவும் மாத்திரம் இயலும்.
அது வலி உண்டாக்கவல்லது.
என் இளந்துறவியே! இதற்கு மேல் வேண்டாம்!
ஸ்வாமி உன்னை ஆசீர்வாதிப்பாராக!
உன் கதை, இந்தக் குழு மொத்தத்தையும் துன்புறுத்தியது.
இது வண்ணத்துப் பூச்சி அளவு கூட
மதிப்பு இல்லாதது.
இது விளையாட்டோ, வேடிக்கையோ அல்ல.
ஆதலால், டான் பீட்டர் எனும் பெயருள்ள துறவியே!
மகிழ்ச்சியான விஷயம் எங்களுக்குச் சொல்வாய்!
உண்மையில், உன் குதிரையின் முகத்தருகே
இருபுறமும் தொங்கும் மணிகளின்
கிண்கிணி சப்தமில்லாவிட்டால்,
நான் உறங்கி கீழே விழுந்திருப்பேன்.
நமக்காக மரித்த பரலோக ராஜாவின்
பெயரால் இதைச் சொல்கிறேன்.
நாம் பயணித்த சேறு ஆழமில்லை.
இங்குள்ள பல்கலைக்கழக மாணவர்கள் சொன்னபடி,
உன் கதை வீணாய்ச் சொல்லப்பட்டது.
ஏனெனில், கேட்க ஆள் இல்லாத போது,
ஒருவன் தன் கதையைச் சொல்வதில் சிறிதும் பயனில்லை.
சொல்லப்படும் விஷயங்களைக் கேட்டுத்
தீர்மானிக்கும் திறம் எனக்குண்டு.
ஆதலின், உன்னை வேண்டுகிறேன்.
ஒரு வேட்டையாடும் கதை சொல்வாய், " என்றான்.

"இல்லை" என்றான் இளந்துறவி.
"எனக்கு கேளிக்கையில் இஷ்டமில்லை.
நான் ஏற்கெனவே சொன்னது போல,
வேறொருவர் கதை சொல்லட்டும், " என்றான்.

எங்கள் விருந்தளிப்போன், தடித்த முரட்டுக்குரலில்,
பெண் துறவியின் உடனிருந்த
இளம் ஆண் துறவிக்குச் சொன்னது.
"சர். யோவான்[2] எனப்படும் துறவியே, அருகே வருக.
எங்கள் மனம் மகிழும் விஷயம் கூறுக.
ஒரு நோஞ்சான் குதிரை மீது
பயணித்தும் மகிழ்வாக உள்ளாயே!?
அக்குதிரை உனக்குச் சேவகம் செய்வதால்,
உன் இருதயம் உவகையாக உள்ளது.
அது உனக்கு ஊழியம் செய்தால்,
அதை ஏன் பொருட்படுத்துவானேன்?"

இது கேட்ட சர், யோவான் எனும் இனிய துறவி,
"ஆம், ஐயா! நான் இவ்வாறு இருக்கிறேன்.
நான் மகிழ்வோடு இராவிட்டால் என்னைக் குற்றம் சொல்வர்."

எனக்கூறி, தான் வடித்திருந்த கதையை
சகலருக்கும் உரைக்க ஆரம்பித்தான்.

# இளம் துறவி சொன்ன கதை

ஒரு காலத்தில்,
வயதான ஏழை விதவை இருந்தாள்.
அவள், மலைகளின் நடுவே ஒரு பள்ளத்தாக்கில்,
சோலையின் பின்புறம் வாழ்ந்தாள்.
அவள் கடைசியாய் சுமங்கலியாய்
வாழ்ந்த நாள் முதல்,
தன்னிடம் உள்ள பொருட்களை வைத்தும்,
ஒரு சிறிய வீட்டின் வாடகை வருமானத்திலும்,
எளிய வாழ்வைப் பொறுமையாய் வாழ்ந்து வந்தாள்.
ஸ்வாமி தந்தவற்றை அனுபவித்து,
தன்னையும், தன் புத்திரிகள் இருவரையும்
பராமரித்து வந்தாள்

உண்மையாய் உரைத்தால்,
அவளிடம் மூன்று பன்றிகள் மாத்திரமே உண்டு.
மூன்று பசுக்களும், மோல் என்ற நாமம்
கொண்ட செம்மறியாடும் உண்டு.
அவளது வரவேற்பறையும், சயன அறையும்
புகை மண்டி, கருப்பாய் இருக்கும்.
அவ்வறைகளில், பல முறை எளிய ஆகாரம்
மட்டும் சாப்பிட்டிருக்கிறாள்.
சுவையான சூப் அவளுக்குத் தேவைப்பட்டதில்லை.
நல்ல உணவை அவள் ருசித்ததில்லை
அவள் உடையைப் போலவே அவள் உணவும்.
வயிறார உண்டு அவள் நோயுறவில்லை
மித உணவே அவள் கொண்ட மருந்து.
முடக்குவாதம், அவள் நடனமாட இடையூறு செய்தது.
பக்கவாதத்தால் அவளுக்குத் தலைசுற்றல் வந்தது.
வெண்மையோ, சிவப்பு நிறமோ
கொண்ட மதுவை அவள் அருந்தவில்லை.
அவளது உணவு மேஜை, வெண்மை அல்லது
கருப்பு நிறத்துணியால் மூடப்பட்டிருந்தது.

பாலும், பழுப்பு நிற ரொட்டியும் அதில் நிறைந்திருந்தன.
வறுத்த பன்றி இறைச்சியும்,
ஓரிரு முட்டைகளும் உண்பாள்.
முற்றத்தில், சுற்றி வேலி அடைத்த இடத்தில்,
சிறிய பால் பண்ணை வியாபாரம் உண்டு.
ஒரு வறண்ட கழிவுநீர்ச் சாக்கடை புறத்தே உண்டு.

முற்றத்தில் சாண்டிக்ளேர் என்ற நாமம்
கொண்ட சேவல் ஒன்று.
கூவுவதில் அதற்கு இணை
எல்லா தேசத்திலும் இல்லை.
திருப்பலி காலங்களில் தேவாலயங்களில் ஒலிக்கும்
எக்காள இசையிலும் மகிழ்வாய், உரத்து அது கூவும்.
கடிகாரம் அல்லது கன்னியர் மடத்தில் உள்ள
காலமானியை விடவும்,
அந்தச் சேவலின் கூவுதலில் துல்லியம் உண்டு.
அந்நகரின் பகல்-இரவு காலக் கணக்கைக்
கணித்தும் வைத்திருந்தது.
சூரியக் கடிகாரத்தில், பதினைந்து பாகைகள் உயர்ந்தால்,
அது தீர்க்கமான இறுதிக்குரல் எழுப்பும்.
அதன் தலைக்கொண்டை நல்ல பவளத்திலும் சிகப்பு.
அதில், உச்சிக் கோட்டைச் சுவர் போல்
இடைவெளிகள் இருக்கும்,
கூரிய அலகு கருமையாய் ஒளிரும்.
இரு கால்களும்,பாத முனைகளும் நீல மயம்.
பின் கால்களின் நகங்கள், குமுத மலரிலும் வெண்மை.
மெருகிடப்பட்ட பொன் அனைய இறகுகள்.

இவ்வுயரிய சேவல், தன்னிடத்தே ஏழு கோழிகளோடு
பெருமையாய், சுகமாய் வாழ்ந்தது.
இவை யாவும், சேவலின் சகோதரிகள் மற்றும் காமக்கிழத்திகள்.
அவை யாவும் சேவல் போன்றே

அழகிய வர்ணம் கொண்டவை.
அவற்றில் வெகு அழகான வர்ணம்
கொண்ட பெர்டிலோட் என்பவள்,
சேவலின் உள்ளங்கவர் ஆசை நாயகி.
பணிவும், புத்திக்கூர்மையும், அழகும்
சகியென கொள்ளத்தக்க வனப்பும் கொண்டவள்
அவள் பிறந்து ஏழே இரவுகள் கழிந்த பின்,
சாண்டிக்ளேர் சேவலின் உள்ளங் கவர்ந்து,
அச்சேவல் அக்கோழியை,
தன் சகல அங்கங்களாலும் தழுவி,
ஆலிங்கனம் செய்து கொண்டது.
எல்லாம் அச்சேவலுக்கு இனியனவாகி,
அது அக்கோழியை ஆழ நேசித்தது.

காலையில், சூரியன் எழும் வேளையில்,
அவை இணைந்து,
‘என் காதலி இப்புவியில் நடந்து வருகிறாள்'
எனக் கானம் பாடும்.
அச்சமயத்தில் தான்,
மிருகங்களும், பட்சிகளும்,
கதைக்கவும், கானம் பாடவும் செய்யும்
என நான் தெரிந்து கொண்டேன்.

ஒருநாள் விடியலில்,
சாண்டிக்ளேர், தன் சகோதரிகள், மனைவிகளோடு
கூடத்தில், உயர இருக்கையில் வீற்றிருக்க,
அவளருகே, வசீகரமான பெர்டிலோட் அமர்ந்திருக்க,
சாண்டிக்ளேர் சேவல்,
கனவு உறக்கத்தில் திடுக்கிட்ட மனிதன் போல்,
தன் தொண்டையைச் செருமினான்.
இது கண்ட அழகிய பெர்டிலோட் திடுக்குற்று,
''என் இனியவனே!

எது உன்னை வருந்த வைக்கிறது?
நான் சொல்வது உனக்குக் கேட்கிறதா?
நீ உறங்குகிற கட்டியங்காரன். வெட்கம்!'' என்றாள்.
அதற்கு மறுமொழியாய் சாண்டிக்ளேர்,
'ஆ, சீமாட்டியே! அதைத் துக்கமென கொள்ளாதே!
ஸ்வாமியின் பெயரால் சத்தியமாய்ச் சொல்கிறேன்.
என் இருதயம் அச்சமுற்று திடுக்கிட்டது.
தற்போதும் என் எம்பெருமான்,
என் கனவைச் சரியாய்ச் செப்பனிட்டு,
என் சரீரத்தை தீயவற்றிற்கு விலக்கட்டும்.
நான் கண்ட சொப்பனத்தில், முற்றத்தில்,
நான் மேலும், கீழுமாய் நடந்து கொண்டிருந்தேன்.
அவ்வமயம், நாய் போலும் தோன்றிய மிருகம்,
என்னைப் பட்சித்து, என்னைக் கொன்று போட்டது.
அந்நாய், மஞ்சளும் சிவப்புமாய் வர்ணம் கொண்டது.
உடலில் வேறு பாகங்கள் போலன்றி,
வால் கூர்மையான கரு முனை.
காதுகளும் அவ்வண்ணமே கூர்மை.
நாசி சிறியது. ஒளிரும் கண்கள்.
அவ்வுருவத்தை நினைத்தாலே நான் சாகிறேன்.
இதுவே நான் அச்சமுறக் காரணம் என ஒப்புக்கொள்கிறேன். '
அதற்கு பெர்டிலோட்,
'அடச்சீ! துணிவு அற்றவனே!
அந்தோ! மேலே இருக்கும் ஸ்வாமியின் பெயரால்
நீ என் இருதய அன்பையும், காதலையும் இழந்தாய்.
உண்மையில், ஒரு கோழையைக் காதலிக்க இயலாது.

உண்மையில், என்ன சொன்னாலும்,
ஒரு பெண் விரும்புவது, திடமான அறிவுள்ள,
நம்பத்தகுந்த, சுதந்திரமுள்ள மனுஷனையே!
கஞ்சனையும், முட்டாளையும் அல்ல.
எல்லா வஸ்துக்களையும் கண்டு அஞ்சுபவன்,

தற்புகழ்ச்சிக்காரன், ஆகியோரை
எம்பெருமானின் பெயரால் பெண்கள் வெறுப்பர்.
என்ன துணிவிருந்தால், உன் காதலியிடம்,
அச்சமடைந்ததாய்ச் சொல்லுவாய்?
இது வெட்கப்படும் விஷயம்.
உனக்கு மனத்துணிவு இல்லையா?
உனக்குத் தாடி இல்லையா?
அந்தோ! சொப்பனம் கண்டா பயந்தாய்?
சொப்பனம் எல்லாம் பரிகசிக்கத்தக்கது,
என எம்பெருமான் அறிவாரே!
ஒருவன் உள்ளம் நிறைந்து, ததும்பும் மனத்தின்
கோப தாபங்களின் அசுத்த வெளிப்பாடுகள்
சொப்பனம் அல்லவா?
அது மிதமிஞ்சிய குரோதத்தின் வெளிப்பாடு.

ஆதலால், சொப்பனம் கண்டோர் திகிலுறுவர்.
அம்புகளும், நீண்ட செம்பிழம்பு அக்கினியும்,
வல்லிய பட்சிக்கும் சண்டையிடும் மிருகங்களும்,
ஊளையிடும் பெரும் ஓநாய்களும்,
உறக்கத்தில் கண்டு, துயருறும் மன நிலையில்
மனிதரும் அலறி அழுகிறார்.
அவ்வண்ணமே,
அச்சமூட்டும் கருங்கரடி, கரிய எருதுகள்
அல்லது கோணிச் சாக்கில்
மனிதர்களைக் கட்டும் பூதங்கள்.
இன்ன பிற காட்சிகளும் நான் சொல்வேன்.
இவை யாவும் உறங்கும் மனிதனுக்கு
துன்பம் கொணரும்.
ஆனால், இவைகளை விவரிக்காது மேலும் சொல்கிறேன்.
ஆழ்ந்த உறக்கத்தில் வரும்,
கனவுகளை எண்ணி சஞ்சலமடையக் கூடாது என
கேட்டோ[3] எனும் புத்திமான் சொல்லவில்லையா?

ஆதலால், எம்பெருமானின் பிரியத்துக்காக,
தற்போதும் என் ஆன்ம விசாரம் போக்க,
நல்ல மருந்துகள் உட்கொள்ளுவீர்.
இந்தப் பண்ணையில் நான் மருந்து விற்பவள் அல்ல.
நீ தாமதிக்கக் கூடாது, என்பதால்,
நானே சில மூலிகைகளைத் தேடி வருகிறேன்.
அது உனக்கு நல்ல உடல் நலம் தரும்.
நம் கொல்லைப்புறத் தோட்டத்தில்,
இம்மூலிகைகளைத் தேடிக் கண்டுபிடிப்பேன்.
அவை உன்னை முழுதும் சுத்தப்படுத்தும்
தன்மை உடையன.
எம்பெருமானின் அன்பிற்காய் இதை மறவாதே,
துர்குணத்தாலும், கோபாவேசத்தாலும் நிரம்பியுள்ளது உன் உடல்.
இப்போது கெட்ட எண்ணங்களால் நிரப்பப்பட்டுள்ளாய்.
உச்சிப்பகல் குறித்தும், மனச்சோர்வு குறித்தும் எச்சரிக்கையாயிரு.
உனக்கு சரீர வலி ஏற்படலாம்,
அல்லது தீங்கு தரும் குளிர் ஜ்வரம் வரும்.
இல்லையெனில், இது உனக்கு வரப்போகும்
சாபக்கேடான நிலைக்கு முன் அறிகுறி.
இதற்கு ஒரு வெள்ளிப் பணம் பந்தயம் கட்டுகிறேன்.
ஒன்று அல்லது இரு தினங்கள்,
குடற்பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள் உண்பாய்.
அதன் பின், மலமிளக்கி மருந்துகள்,
வாகை செடி, பல மூலிகைகள், புகை மருந்துகள்,
கொடி மூலிகை யாவும், நம் முற்றத்தில் அமோகமாய் வளர்கிறது.
அவை வளரும் போதே அவைகளைப் பறித்து, உள்ளே முழுங்கு.
உன் தந்தையின் உறவினருக்காய்
மகிழ்வாய் இரு, என் புருஷனே!
கனவுகள் கண்டு கலங்காதே!
இதற்கு மேலும் நான் சொல்லுவதில்லை!
அதற்கு சாண்டிக்ளேர் சொல்கிறான்!

"உன் அறிவுள்ள கருத்திற்கு என் நன்றி!
‘கனவு கண்டு கலங்காதே' என்ற
ஞானமுள்ள கேட்டோவின் அறிவுரையை மீறவில்லை.
எனினும், கேட்டோவை விட கல்விமான்கள்
அனுபவத்தில் கண்டு எழுதிய பழம் நூல்களில்
இதற்கு நேர்மாறாய் கருத்துக்கள் உண்டு.
சொப்பனங்கள் நல்ல அறிகுறிகள்.
சந்தோஷங்கள், இடர்ப்பாடுகள் இரண்டும் இதில் உண்டு.
இப்போதைய உலக வாழ்வில் இந்நடைமுறை உண்டு.
இதில் விவாதிக்க ஏதுமில்லை.
இதைச் சொல்வதற்கு என்னை மன்னிக்கவும்.
இதன் நிரூபணம் உண்மையில் காட்டப்பட்டுள்ளது.
பல மனுஷரும் வாசித்த மிகப்பெரும்
எழுத்தாளர் சொல்கிறார்.
முன்னொரு காலத்தில் இரு தோழர்கள்.
நல்லெண்ணத்தோடு, தீர்த்த யாத்திரையாய்
ஒரு நகரத்திற்குச் சென்றனர்.
அங்கு பெருங்கூட்டமாய் மனுஷர்கள்.
முன்னும், பின்னுமாய் நடமாடும் மனுஷர்.
எங்கு தேடியும், இருவர் தங்கும் இடம் இல்லை.
ஆதலின், தேவைக்காய் இருவரும் தனித்தனியே சென்று,
கிடைத்த தனி இடங்களில் தங்க எண்ணினர்.
ஒருவனுக்கு கொல்லைப்புற மாட்டுக் கொட்டம் கிட்டியது.
அதில் உழவு மாடு இருந்தது.
மற்றவன், அதிர்ஷ்டவசமாய் நல்ல இடம் அடைந்தான்.
பின் என்ன நிகழ்ந்தது என்றால்,
இரண்டாம் மனிதன் படுக்கையில் உறங்கி
கனவு கண்டான்.
அதில் முன்னவன் தன்னை அழைத்து,
"அந்தோ! எருது அடைக்கும் பட்டியில்
உறங்கும் நான் கொலை செய்யப்படுவேன்.
என் சகோதரனே, நான் மரிக்கும் முன் எனக்கு உதவுவாய்.

விரைந்து என்னிடம் வா" என அலறினான்.
சொப்பனம் கண்ட இரண்டாமவன் அலறி எழுந்தான்.
ஆனால், உறக்கம் கலைந்தவன்
இது வெறும் கனவே என எண்ணி,
நீண்ட கொட்டாவி விட்டு,
தலையணையில் புரண்டு படுத்தான்.
மீண்டும் உறங்கிய போது, மீண்டும் அதே கனவு.
மூன்றாம் முறை, கனவில் ஒரு குரல்
(அல்லது அவ்வாறு அவன் கருதினான்)
"என் சகாவே, நான் கொல்லப்பட்டேன்.
என் ஆழமான, அகண்ட குருதிக் காயங்களைப் பார்.
நாளைக் காலை நீ எழுந்து,
இந்நகர் மேற்கு வாசல் கதவண்டை செல்.
அங்கு ஒரு எரு வண்டி நிற்கக் காண்பாய்.
அதன் உள்ளே என் உடல் புதைந்திருக்கும்.
அவ்வண்டியை தைரியமாய் வழிமறித்து நில்.
அவர்கள் என்னிடம் உள்ள பணத்திற்காய்
என்னைக் கொலை செய்தனர், "
என்று கொலை செய்த விவரத்தை, நுணுக்கமாய்
துயரத்தோடு, வாடிய முகத்துடன் சொன்னான்.
இக்கனவு முழுவதும் நடந்தது.

மறுநாள் அதிகாலை,
தன் சகா தங்கிய இடம் சென்றான் இரண்டாமவன்.
மாட்டுக் கொட்டம் வந்தான். சகாவை விளித்தான்.
உடனே, அந்த வீட்டுக்காரன்,
"அய்யா, உன் சகா காலையில் போனான்.
அதிகாலையே நகருக்கு வெளியே போனான்" என்றான்.
அவன் சொன்னதில் சந்தேகம் எழுந்தது.
தான் முன்னிரவில் கண்ட கனாவை எண்ணி,
உடனே தாமதமின்றி மேற்கு வாசல் நோக்கி ஓடினான்.
அங்கு இடுகுழி நோக்கிப் போன எரு வண்டி கண்டான்.
தன் கனாவில் இறந்தவன் சொன்ன விதமாய் இருந்தது.

மனதைத் திடப்படுத்திக் கொண்டு, இச்சதிக்கு எதிராய்
பழி தீர்க்க சபதமெடுத்தான் அவன்.

"என் சகா கடந்த இரவு கொல்லப்பட்டு,
இதோ, இந்த வண்டியுள்ளே கிடக்கிறான்.
அவன் முகம் மேல் நோக்கி உள்ளது.
காவல் அதிகாரிகளே பாரீர்!" என்றான்.
அதுவே அந்நகரில் போதுமானதாய் இருந்தது.
[இக்கதையை இன்னும் நான் ஏன் சொல்ல வேண்டும்?! ]
மக்கள் திரண்டனர். எரு வண்டியை புரட்டினர்.
அங்கு சாணத்தின் நடுவே
உறக்கத்தில் கொல்லப்பட்டவன் கிடந்தான்.
உண்மையும், விசாலமும், மகிமையும் உள்ள ஸ்வாமி!
அந்தோ! கொலைக் குற்றத்தை தேவரீர்
எப்போதும் வெளிக் கொணர்கிறீர் !
கொலை பாதகங்கள் அம்பலமாவதை அனுதினம் காண்கிறோம்.
நீதி, நியாயமுள்ள ஸ்வாமிக்கு
கொலைச் செயல் வெறுக்கத்தக்க பாவம்.
அது மறைக்கப்பட்டால் அவர் பொறுப்பதில்லை.
அது ஓராண்டு, ஈராண்டு, மூன்றாண்டு மறைந்திருக்கலாம்.
கொலை பாதகம் வெளியாகும்.
இத்துடன் நான் முடித்துக் கொள்கிறேன்.
உடனே, நகர அதிகாரிகள்
வண்டிக்காரனையும், அதன் எஜமானனையும்
எலும்புகள் நொறுங்க நையப் புடைத்தனர்.
இருவரும் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொள்ள,
உடனே தூக்கிலிடப்பட்டனர்.
கனவுகள் அச்சப்படத்தக்கதென மனுஷர் காணலாம்.
இதற்குப் பின்னே, அதே புத்தகத்தில்
வேறோர் கதையும் படித்தேன்
நான் மகிழ்ந்திருக்க விரும்பி, மிகைப்படப் பேசவில்லை.

முன்பொரு சமயம்,

இருவர் ஏதோ அலுவல் நிமித்தமாய்,
தூர தேசத்திற்கு கப்பலில் போனார்கள்.
பாதுகாப்பான அப்பட்டணத்தில்,
கடற்காற்று முரண்பட்டு வீசியதால்,
ஊர் திரும்ப வழியின்றி,
அங்கேயே கவலையுற்றனர் அவ்விருவர்.

எனினும்,
கடற்காற்று அவர்களுக்கு சாதகமாய் வீசியது.
மறுநாள் காலை பிரயாணம் தொடர எண்ணி,
மகிழ்வுடன் ஓய்வு கொள்ளச் சென்றனர்.
ஒருவன் உறங்கிய போது கனவில் இது கண்டான்.
தன்னருகே ஒருவன் நின்று,
(பயணம் போகாமல்) அங்கேயே தங்கி விடுமாறு உத்தரவிடக் கண்டான்.
‘நீ நாளை பயணம் சென்றால்,
கடலில் மூழ்குவாய்' என்றான்.
உறங்கியவன் விழித்து, தன் சகாவிடம்
மறுநாள் பயணம் வேண்டாமென்றும்,
அதை மறக்குமாறும்,
ஒரு நாள் தன்னுடன் தங்குமாறும் வேண்டினான்.
அங்கு படுத்திருந்த அவன் சகா சிரித்து,
அவனைத் திட்டி,
''என் வேலைகளை நிறுத்தும்படிக்கு,
எந்தக்கனவும் என்னை அதிர்ச்சியடைய வைக்காது, '' என்றான்.
உன் கனவை நான் பொருட்படுத்துவதில்லை.
காட்சிகள் யாவும் தோற்ற மாயை.
மனுஷர் தினமும் ஆந்தைகளையும்,
மனுஷக் குரங்குகளையும்,
பல பூத, பைசாசங்களையும் கனவு காண்கிறார்.
இல்லாததையும், இல்லாதிருக்கப் போவதையும் கனவு காண்கிறார்.
நீ இந்த நல்ல கடற்காற்றை,
அலைகளை சாதகமாக்கிக் கொள்ளாமல்,

இங்கு தங்கினால், உன் இஷ்டம்.
ஸ்வாமி எல்லாம் அறிவார்.
என்னை மன்னிக்கவும்.
எனினும் இன்று நல்ல பொழுதாகட்டும்!"
என விடை பெற்று கடலில் போனான்.
ஆனால், பாதி தூரம் கடலில் கடந்த பின்,
என்ன கோளாறு என நானறியேன்.
அக்கப்பலின் அடி பாகம் பிளந்தது.
அக்கப்பலும், அதன் மனுஷரும் ஜலத்திலுள் மூழ்கினர்.
அதனருகே, அதே காற்றில், அலையில்
பல கப்பல்கள் நன்கு மிதந்தபடி சென்றன,
"ஆதலினால், என் இனிய பெர்டிலோட்!
பழங்கால நிகழ்வுகளிலிருந்து நீ அறிவது,
யாரும் கனாக்கள் குறித்து அசட்டையாய் இருத்தல் கூடாது.
ஏனெனில், என் அழகிய காமக்கிழத்தியே!
உனக்கொன்று சொல்கிறேன்.
பல கனவுகளும் கண்டு அச்சமுறத்தக்கன.
மெர்சியா நாட்டு மகா மன்னன்
கெனெல் ஃபஸ்ஸின் புத்திரன்

பரிசுத்த கெனெல்ம்[4] என்பவர் வாழ்க்கையைப் படித்தேன்.
அவன் கொலை செய்யப்படும் முன் கனவொன்று கண்டான்.
அதை அவன் செவிலித்தாய் அர்த்தம் கண்டு,
அவனுக்கெதிராய் சதி நடப்பதாய் எச்சரித்தாள்.
ஆனால், கனவுகளின் பலன் குறித்து அவனுக்கு
தகவல் சொல்லப்படவில்லை.
அவன் வயதோ ஏழு.
சுத்த, பரிசுத்த உள்ளம்.
என்னைப் போலவே நீயும் இதைப் படித்திருக்க வேண்டும்.
பெர்டிலோட் சீமாட்டி!
உனக்கு மெய்யாகவே சொல்லுகிறேன்.

ஸ்கிபியோ எனும் ஆப்பிரிக்கனைப் பற்றி எழுதிய மேக்ரோபியஸ்[5]
நெடுங்காலம் முன்பு,
‘கனவுகள், மனிதர்களின் எதிர்கால நிகழ்வுகளால்,
தரும் முன்னெச்சரிக்கைகள்' என்று சொல்லியுள்ளார்.
மேலும் பழைய ஏற்பாட்டில்
தானியேலின்[6] புத்தகத்தை கவனமாய் வாசி.
அவன் கனவு வெறும் பொய்யோ?
யோசேப்பின்[7] சரித்திரம் படி.
அதிலும் கனவுகள் (எல்லாம் அல்ல)
முன்னெச்சரிக்கை எனக் காண்பாய்.
எகிப்தின் ராஜா பாரவோன்[8] நிலையைப் பார்.
அவனது சமையற்காரனும், அப்பம் சுடுவோனும்,
கனவுகளின் பலன்களை அறிந்தார்களா?
பல தேசங்களையும், கோட்பாடுகளையும் அறிந்தவர்கள்,
கனவுகளின் அற்புத பலன்களை அறிவார்கள்.
லீதியா தேசத்து அரசன் க்ரோஸஸ்[9],
மரத்தின் மேல் அமர்வது போல் கனவு கண்டு,
பின்னாளில் தூக்கிலிடப்படவில்லையா?
அந்தோ, ஹெக்டரின் மனைவி அந்த்ரோமக்கி[10]
போர்க்களத்தில் கணவன் போரிட்டால் மாள்வான்
என முன்னிரவில் தடுத்தும் கேளாமல்,
அவன் போரிட்டு மாளவில்லையா?
அவன் சகுனங்களை மீறிப் போரிடச் சென்று,
அக்கிலஸ்[11] என்பவனால்,
சிறிது நேரத்திலேயே கொல்லப்பட்டான்.
ஆனால், அக்கதை மிக நெடிது.
இப்போது பகல் நேரம்.
அக்கதையை விவரிப்பது சரியல்ல.
இத்துடன் இதற்கு முற்றுப்புள்ளி வைக்கிறேன்.
இந்தக் கனவுக் காட்சியின் நிமித்தம்,
துன்பம் வருமென எண்ணுகிறேன்.

அத்துடன் என்னிடம் மலமிளக்கி மருந்துகள் இல்லை.
அவை விஷத்தன்மை உடையன என அறிவேன்.
உண்மையைச் சொன்னால், அவைகளை உண்பதில்லை.
அவைகளை விரும்புவதில்லை.
இத்துடன் நிறுத்திக் கொண்டு,
சந்தோஷமான விஷயங்கள் பேசுவோம்.
என் இனிய பெர்டிலோட்!
ஆனந்தத்தை விரும்பிய எனக்கு
ஸ்வாமி அதிக கிருபை தந்துள்ளார்.
உன் அழகிய முகத்தைப் பார்க்கும் போது,
இரு கண்களுக்குக் கீழே ரோஜா நிறச் சிவப்பு
என் மன அச்சங்களை கொன்று போடுகிறது.

‘ஸ்திரீ என்பவள் மனுஷனின் சுகத்திற்கென உண்டானவள்.
அவனது பரவசம் அவளே!'
எனும் இலத்தீன் பழமொழி உண்மையானது.
இராக்காலத்தில் உன் மென்மையான அங்கங்களை
நான் உணர்ந்தும்,
உன் மேல் சவாரி செய்ய முடியாதபடி
உன் பின்புறம் மிகக் குறுகலாய் உள்ளது.
அந்தோ, எனக்குத் துடிப்பு இருந்தும்
அதில் பயனில்லை.
ஆதலால், எனக்கு இத்தகு காட்சிகள்,
சொப்பனங்கள் தோன்றுகின்றன."

இவ்வாறு உரைத்த சாண்டிக்ளேர்,
மேல் விதானம் விட்டிறங்கினான்.
அது பகல் பொழுது ;
ஆதலால் கோழிகள் அவனுடன் சென்றன.
முற்றத்தில் சோள தானியங்கள் கண்ட அவை,
‘க்ளக், க்ளக்' எனக் கூப்பிடத் தொடங்கின.
சாண்டிக்ளேர் கம்பீரமடைந்தான். அச்சம் விட்டான்.

அவன் பெர்ட்டிலோட்டின் படுக்கையை
பல முறை இறகுகளால் நிரப்பி,
விடிகாலம் வருமுன் இருபது முறைகள்
அவளை ‘ஆக்கிரமித்தான்.'
உக்கிரமான சிங்கம் போன்ற தோற்றத்துடன்,
முன் கால்களில் ஊன்றி கம்பீரமாய்
முன்னும் பின்னுமாய் நடந்தான்.
ஒரு போதும் கால்களைத் தரையில் பதிக்கவில்லை.
ஒரு சோள மணியைக் கண்டால் ‘க்ளக்' என சப்தமிட்டான்.
உடனே, அவன் மனைவியர் ஓடி வந்தனர்.
இவ்வண்ணமாய், அரசவை இளவரசன் போலே
இருந்த சாண்டிக்ளேரை,
உணவருந்த விட்டு விடுவோம்.
பின் நடந்த சம்பவங்களை விவரிக்கிறேன்.

எம்பெருமான், மனுஷனை முதன் முதலாய் சிருஷ்டித்த
அதே மார்ச் மாதம் முப்பத்தி இரண்டு நாட்களும் கழிந்து,
அது எவ்வாறு நிகழ்ந்ததென்றால்,
தன் ஏழு மனைவியரும் அருகே நடந்து வர,
தன் இரு கண்களால், ஜ்வலிக்கும் சூரியனை
சாண்டிக்ளேர் பெருமையுடன் பார்த்தான்.
அந்நேரத்தில், சூரியன், ரிஷப ராசியில்,
இருபத்தோரு பாகைககளும் இன்னும் சிறிதும் கடந்திருந்தான்.
ஆதலின், வேறு விசேஷ அறிவு தேவையின்றி,
உள்ளுணர்வால், அது காலை என அறிந்து
மகிழ்வோடு கூவினான்.

''என் ப்ரியமே! அதோ புதிதாய் உதித்த சூரியன்,
நாற்பத்தியோரு பாகைகளும், இன்னும் சிறிதும் கடந்துள்ளது.
நான் ஸ்துதி செய்யும் பெர்ட்டிலோட் சீமாட்டியே!
சந்தோஷமாயுள்ள இப்பட்சிகளைப் பார்!
அவை எப்படி கீதம் இசைக்கிறது பார்!

இந்தப் புஷ்பங்கள் எல்லாம்
எப்படி புஷ்பிக்கின்றன எனப் பார்!
என் மனதில் குதூகலமும், கிருபையும் நிறைந்துள்ளது. "
இவ்வளவும் சொன்னவன் திடீரென்று துயருற்றான்.
ஏனெனில், இன்பத்தின் பின்பாதி துன்பமன்றோ?
உலக இன்பங்கள் துரிதாய் விரைந்தோடும் என ஸ்வாமி அறிவார்.
இதை விவரண எழுத்தாளன் எழுத முனைந்தால்,
மாட்சிமை உடைய மன்னனைப் போல் குறிப்பு எழுதுவான்.
எல்லா ஞானியரும்,
இப்போது கவனமாய்க் கேட்க வேண்டும்.
நான் சொல்லப் போகும் கதை,
லேன்ஸ்லாட்[12] கதையைப் போல் உண்மையானது.
இதைப் பெண்கள் பெரிதும் போற்றுகிறார்.
தந்திரமுள்ள, மோசமான நரி ஒன்று,
ஒரு காட்டில், இரண்டு, மூன்று
வருடங்களாய் வாழ்ந்து வந்தது.
ஏற்கெனவே போட்ட திட்டப்படி அந்நரி,
அன்றிரவு, புதர் வேலியை உடைத்து
அழகிய சாண்டிக்ளேர் வசித்த
வீட்டின் கொல்லைப்புறம் வந்தது.
பசுந்தழை பரப்பி, மெத்தையாக்கி,
அதன் மேல் சயனிப்பது
சேவலுக்கும், அவன் மனைவியருக்கும் வழக்கம்.
மனுஷரை மறைந்திருந்து கொலை செய்யும்
கொலைகாரனைப் போலவே,
நரியும், சாண்டிக்ளேர் மீது தாக்குதல்
செய்ய காத்திருந்தது.
உன் (சேவல்) வீட்டில்
மறைந்திருக்கிறான் ஒரு கொலைகாரன்.
ஒரு புதிய இஸ்கரியேத்[13]! ஒரு புதிய கனிலோன்[14]!
பொய் வஞ்சகன்!
ட்ராய் நகரை அழித்துத் துயரப்படுத்திய கிரேக்க சினோன்[15].
சாண்டிக்ளேர்!

இந்நாள் உனக்கு சாபக்கேடான நாள்!
விதானத்திலிருந்து பறந்து கீழே வந்த நேரம்,
உன் சாபக்கேடான நேரம்.
அந்நாளில் உனக்கு ஆபத்து உண்டென,
கனவுகளின் மூலம் உனக்கு எச்சரிக்கப்பட்டது.
இதை ஸ்வாமி முன்பே அறிவாரெனவும்,
ஆதலால், அப்படியே நடக்கும் எனவும்,
கல்விமான்கள் கருதுகிறார்.
இது ஸ்வாமியின் லீலைகள் என
மத குருக்கள் மாற்றுக் கருத்து கொண்டார்.
கடும் விவாதம் இரு குழுக்களிடையே.
ஒரு லட்சம் பேர் ஈடுபட்ட சர்ச்சை இது.
இதில் உண்மை இதுவென பிரித்தறிய
என் பேனாவால் இயலாது.
அவ்வண்ணமே, பரிசுத்த அகஸ்டின்[16], போத்தியஸ்[17]
அருட்தந்தை ப்ராத்வார்டின்[18] ஆகியோராலும் இயலாது.
நான் செய்ய இருக்கும் செயல் முக்கியமென
ஸ்வாமி முன்பே அறிவாரா?
அல்லது என்னிஷ்டப்படி செயல் செய்ய
அல்லது செய்யாமலிருக்க உரிமை தரப்பட்டுள்ளதா?
செயல் விளையும் முன் ஸ்வாமி அறிவாரென்றால்,
தேவையான ஒன்றல்லாத விஷயமென்றால்,
அது நம்மைக் கட்டுப்படுத்தாது என்றால்,
அத்தகு கடும் விஷயங்களில் நான் பங்கெடுப்பதில்லை.
என் கதை, தன் மனைவியின்
ஆலோசனை கேட்ட சேவலைப் பற்றியது.
நான் முன்பே சொன்ன கனவு கண்ட பின்,
காலையில் முற்றத்தில் அச்சேவல் உலாத்தியது.
பெண்களின் ஆலோசனைகள் கேட்கத்தகுந்ததல்ல.
ஒரு பெண்ணின் ஆலோசனை தான் நமக்கு
முதன் முதலாய் துன்பம் கொண்டு வந்தது.
இதனால், தான் மிகவும் சந்தோஷமாய், சௌகரியமாய்

வசித்த பரதீசை விட்டு ஆதாம் அகன்றான்.
ஆனால், அதை விளையாட்டாகச் சொன்னேன்.
இதே கருத்துக்கள் சொல்லும் எழுத்தாளர்களைப் படிக்கவும்.
அவர்கள் பெண்கள் பற்றிக் கூறுவதைக் கேட்கவும்.
நான் சொன்னவை சேவலின் மொழிகள்.
என்னுடையவை அல்ல.
பெண்களை இறை நிலையில் பார்ப்பது தவறில்லை.
தன் சகோதரிகளோடு மண்ணில் புரண்டாள் பெர்டிலோட்.
அங்கே ஞாயிற்றொளியில்,
சமுத்திரத்தில் மச்சக் கன்னிகள்
கீதம் இசைப்பது போல,
சாண்டிக்ளேர் பாடிக் கொண்டிருந்தான்.
ஏனெனில், அவை குதூகலமாய் நன்கு பாடும்,
என ஃபிஸியோலோகஸ்[19] உறுதிபடக் கூறுகிறது.
அச்சேவல்,
தற்செயலாய் செடி கொடிகள் மீதும்,
ஒரு வண்ணத்துப் பூச்சி மீதும் கண் பதித்த போது,
அந்நரி அங்கே தாழ்ந்து, பதுங்கியிருக்கக் கண்டான்.
அப்போது கூவுவதைத் தவிர
வேறெதும் தோன்றவில்லை.
உள்ளத்தில் மருண்ட மனிதன் போலே
'கொக்... கொக்... கொக்...' என அலறியது.
எதிரியைக் கண்டால் ஓடுவது
விலங்குகளின் தன்மையன்றோ?
எனினும், எதிரியைக் கண்டதால்
பலத்த சப்தம் எழுப்பவில்லை.
மீண்டும், சாண்டிக்ளேர் அந்நரியைப் பார்த்த போது,
ஓடியிருக்க வேண்டும்.
எனினும், நரி உடனே சேவலிடம் சொன்னது:
"நல்ல அய்யா! ஏன் செல்கிறீர்?
உன் நண்பனாகிய எனைக் காண அச்சமோ?
நான் உனக்கு தீங்கு செய்தால்,

நான் பிசாசை விட மோசமானவன்.
உன் செயல்களை நோட்டமிட வரவில்லை.
மாறாக, உன் பாட்டைக் கேட்க வந்தேன்.
மெய்யாகவே, உன் சாரீரம் தேவதையைப் போன்றது.
மெய்யாகவே, ஸ்வர்க்கத்தில்
தேவதைகளின் இசைக்குழு
பாடும் சங்கீதத்தை விடவும் இனியது.
போத்தியஸ் கூட இசைக்கு
இவ்வளவு உணர்வு தர இயலாது.
என் எஜமானனாகிய உன் தந்தை
(ஸ்வாமி அவர் ஆத்துமாவை ஆசீர்வதிப்பாராக!)
நற்குணமுள்ள உன் தாய் ஆகியோர்,
என் வீட்டில் சுகமாய்த் தங்கியுள்ளனர்.
மெய்யாகவே, நான் உங்களை மகிழ்விக்க முயல்கிறேன்.
ஆனால், மனிதர்கள் இசையைக் குறித்துப் பேசும் போது,
(எனக்கு பகலில் கண் பார்வை தெரிவதால்)
நீயும், உன் தந்தையும் பாடுவது போல
வேறொருவர் பாடிக் கேட்டதில்லை.
உன் தந்தை வைகறையில் பாடுவது
இதயத்திலிருந்து பாடுவது போலிருக்கும்.
அவரது சாரீரம் கனமானது.
அவர் பெரிதும் முயன்று,
இரு கண்களாலும் முழித்துப் பார்ப்பார்.
அவ்வமயம், கழுத்தை உயரே எழுப்பி,
நல்ல அறிவுடைமையோடு,
முன் கால்களில் நின்று உரத்து சப்தமிடுவார்.
பாடுவதிலும், ஞானத்திலும் எந்த வட்டாரத்திலும்
உள்ளவர்கள் அவரை விஞ்ச இயலாது.
தான் பர்னல்[20] எழுதிய கவிதையில் வருவது போல்,
ஒரு சேவல் வாழ்ந்து வந்தது.
ஒரு முதிர்ச்சியில்லாத இளம் துறவி,
அதன் கால்களில் ஒரு உதை கொடுத்தான்.

அச்சேவல், அத்துறவியின்
குருத்துவ பட்டத்தை இழக்க வைத்தது.
உன் பிதாவின் அறிவு, ஞானம் உயர்வுக்கு
ஈடு, இணை ஏதும் இல்லை.
எனவே, இப்போது, இனிய அய்யா!
தேவ ஈவுக்காக, உன் பிதாவைப் போல் பாடுக!
நரி சொன்னதில் விஷமம் ஏதும் காணாதபடியால்,
புகழ்ச்சியில் மயங்கி, சாண்டிக்ளேர் சந்தோஷித்து,
செட்டைகளை விரித்து படபடத்தது.

அந்தோ! பிரபுக்களே!
முழுமையான புகழ்ச்சிக்காரர் உங்கள்
அரசவைகளில் உண்டு.
துதிபாடிகள் அநேகர் உண்டு.
உண்மையும், நீதியுமானவற்றை சொல்பவனை விட,
வெறும் வார்த்தைகளால் தங்கள்
மாட்சிமையைத் துதிப்பவர் உண்டு.
என் பிரபுக்களே!
முகஸ்துதியைக் குறித்து பிரசங்கி புத்தகத்தில்
சொல்லியுள்ளதைப் படியுங்கள்.
எல்லாச் சதிச் செயல்களுக்கும் எச்சரிக்கையாயிருங்கள்.

இந்த சாண்டிக்ளேர், முன் கால்களில் நின்று,
கழுத்தை நீட்டி, கண்களை மூடி,
கற்பனையாய் ஏதோ பாடியது.
உடனே, நரியும் மேலே தாவி
நம் சாண்டிக்ளேரின் கழுத்தைப் பற்றி,
முதுகில் தூக்கியபடி காடு நோக்கி ஓடத் தொடங்கியது.
அவர்களைப் பின் தொடர யாரும் இல்லை.
விதியே! உன்னை யார் தவிர்க்க இயலும்!?
அந்தோ! சாண்டிக்ளேர் விதானம் விட்டுப் பறந்து இறங்கிய போது,

அவனது கனவின் விளைவுகளை அவன் மனைவி எண்ணவில்லை.
ஒரு வெள்ளியன்று இத்துணை அசம்பாவிதமும் நடந்தன.
ஓ! மகிழ்வின் தேவதையான வீனஸே!
இந்த சாண்டிக்ளேர்
        உன்னை உத்தமமாய் சேவித்தபடியால்,
        தன் சரீர சக்திக்கு ஏற்ப,
        தன் இனத்தை விருத்தி செய்வதை விட,
                புலனின்பம் தேடினான்,
        ஏன் அவனை மடிய விட்டாய்?
சிறந்த கவிச்சக்கரவர்த்தி கோ.ஃ.ப்ரெட்[21] அவர்களே!
ராஜா ரிச்சர்ட் லயன்ஹார்ட்[22] அம்பு பட்டு இறந்த போது,
அவனைக் குறித்து துக்கமுடன் இரங்கற்பா படித்தீர்களே!
அந்த வெள்ளிக்கிழமையை கண்டித்து எழுத,
எனக்கு உன்னைப் போல், அறிவும் திறனும் ஏன் இல்லை?
மெய்யாகவே, அவன் வெள்ளியன்று கொல்லப்பட்டான்.
சாண்டிக்ளேரின் பயம், வேதனை குறித்து விளக்குவேன்.
ஏநிட்[23] கவிதை நமக்குச் சொல்வது போல்,
கிழட்டு அரசன் ப்ரையமின்[24]
        தாடியைப் பற்றி இழுத்து,
பிர்ஹஸ்[25] அவனைக் கொலை செய்து,
ட்ராய் நகரை அழித்த போது கூட,
ஸ்திரீகள் இப்படி அழுது புலம்பவில்லை.
        அதை விட அதிகமாய்,
சாண்டிக்ளேரைக் கண்ட போது கோழிகள்
        எழுப்பிய அலறல் இருந்தது.
ஹஸ்த்ருபல்[26] இறந்து,
ரோமாபுரியின் கார்த்தேஜ்[27] நகருக்கு
ரோம சைன்யம் தீயிட்ட போது,
ஹஸ்த்ருபல்லின் மனைவி அலறியதை விடவும்,
அழகிய பெர்டிலோட், செவி கிழிபட அலறினாள்.
ஏனெனில், அவள் அத்துணை துயருற்று கோபமுற்றிருந்தாள்.

தானே தீ மூட்டி, அதில் திடமான மனதுடன்
வீழ்ந்து எரிந்து போனாள்.
ரோம் நகரை நீரோ[28] தீயிட்டு,
ராஜப்ரதானிகளையெல்லாம் கொன்ற போது,
அவர்களின் மனைவிமார்கள் புலம்பிய வண்ணம்
அக்கோழிகள் ஒப்பாரியிட்டன.
என் கதைக்கு நான் வருகிறேன்.
இந்த ஏழை விதவையும்,
அவளது புத்திரிகள் இருவரும்,
கோழிகளின் புலம்பல் கண்டு,
தாமதமின்றி கதவுக்கு வெளியே ஓடிச் சென்று,
சேவலை கழுத்தில் சுமந்தபடி,
நரி காட்டுக்குள் ஓடியதைக் கண்டனர்.

"அதோ, அந்த நரி!" என்றபடி
நரியின் பின்னே ஓடினர்.
அதன் பின்னே, கழிகள் தாங்கியபடி
பல மனுஷரும் ஓடினர்.
அதன் பின்னே, கோல் என்றொரு நாயும்,
தால்போத், கார்லேண்ட் ஆகியோரும்,
கையில் நூல் சுற்றும் தடியோடு மால்கினும் ஓடினர்.
பசுவும், கன்றும் ஓடின.
நாய்களின் குரைப்பால் பயந்த பன்றிகளும் ஓடின.
ஆண்களும், பெண்களும் அலறியபடி ஓடினர்.
இருதயங்கள் உடையும்படி அவர்கள் ஓடினர்.
பயந்த வாத்துக்கள் மரங்களுக்கு மேலே பறந்தன.
தேனீக்கள் கூடுகளை விட்டு வெளியேறின.
ஆ, அங்கே பலத்த சப்தம்!
ஸ்வாமி நம்மை ஆசீர்வதிப்பாராக!
மெய்யாகவே ஜாக் ஸ்டிரா[29] கலவரத்தில்,
டச்சுக்காரர்களை கொலை செய்யத்
துரத்திய போது கூட,

இத்துணை இரைச்சல் கிடையாது.
அதையும் விட அதிகமாய் நரி சப்தமிட்டது.
அவர்கள், வெண்கலத்தாலும், பெட்டிகளாலும்
கொம்பினாலும், எலும்பினாலும்
செய்யப்பட்ட ஊதுகுழல் வாத்தியங்களை
ஊதி, முழக்கி எக்காளமிட்டனர்.
அங்கே, வானமே இடிந்து வீழ்வது
போல் தோன்றியது.
தற்போதும் நல்ல மனுஷரே!
நான் சொல்வதை செவி மடுக்கும்படி வேண்டுகிறேன்.
பெருமை, நம்பிக்கை உடைய
எதிரியின் அதிர்ஷ்டத்தையும்
விதி எப்படி திடீரென மாற்றுகிறது!?
நரியின் முதுகில் கிடந்த சேவல் அவனை நோக்கி,
அஞ்சி, நடுங்கி 'க்ளக்' சப்தமிட்டுச் சொன்னது.
"அய்யா! நான் உன்னுடைய
ஸ்தானத்தில் இருந்திருந்தால்,
ஒரு வேளை இவ்வாறு சொல்லியிருப்பேன்.
'அகந்தையான குடியானவர்களே!
எல்லோரும் ஓடிப் போங்கள்.
உங்கள் மேல் கொள்ளை நோய் வரட்டும்.'
இதோ, இந்த இருண்ட வனத்தில்
நான் வந்துவிட்டதால்,
இந்தச் சேவலை இப்பொழுதே உண்பேன்."
நரி சொன்னது:
'உண்மையில் அதுவே நடக்கட்டும்!'
இப்படி நரி சொன்ன போது,
சேவல் அதன் வாயிலிருந்து தப்பி,
சமயோஜிதமாய் ஒரு மரத்தின்
உச்சிக்குப் பறந்து விட்டது.
சேவல் தப்பித்ததைக் கண்ட நரி,
'அந்தோ! ஓ சாண்டிக்ளேர்,
உனக்கெதிராய் நான் செய்த மீறுதல் கீழ்த்தரமானது.

நான் உன்னை பயமுறுத்தி விட்டேன்.
என் பழைய நண்பனே!
உன்னை வீட்டு முற்றத்தில் இருந்து
தூக்கிக் கொண்டு வந்த போது,
யாதொரு தீய எண்ணமும் எனக்கில்லை.
நீ கீழே இறங்கி வந்தால்,
என் நிலையை விளக்கிச் சொல்வேன்.
மெய்யை எடுத்துரைப்பேன்!
அதைச் செய்ய ஸ்வாமி எனக்கு உதவட்டும்!'
சேவல் பதிலுக்கு
''நம் இருவர் மேலும் சாபம் வரட்டும்.
என் எலும்பு, ரத்தம் மீதும் சாபம் வரட்டும்.
நீ என்னை ஒரு முறை ஏமாற்றியபடியால்
இனியும் என்னை முகஸ்துதி
செய்து ஏமாற்ற முடியாது.
என் ஒரு கண்ணை மூடி,
மற்றொரு கண்ணைத் திறந்தபடி,
நான் பாட இயலாது.
கண் திறந்து காண வேண்டிய நேரத்தில்,
தன்னிஷ்டப்படி ஒரு கண் மூடி,
ஒரு கண் திறந்து பாடுபவனை
ஸ்வாமி இக்கட்டிலிருந்து விடுவிப்பதில்லை.''
அதற்கு நரி பிரதியுத்தரமாக,
‘இல்லை, அறிவில்லாத முறையில் செயல்படுவோனுக்கு
ஸ்வாமி துரதிருஷ்டம் தருகிறார்.
தான் மௌனம் காக்க வேண்டிய நேரத்தில்
அவன் பேசுகிறான்.'
அந்தோ! காவல் இன்றி இருக்கும் போது,
முகஸ்துதி குறித்து ஒருவன் அசட்டையாய்
இருந்தால் எத்தனை விளைவுகள் ஏற்படும்!?'

நீங்கள் இந்தக் கதையை,

நரி, சேவல், கோழியின்
முட்டாள்தனமான கதை என எண்ணினாலும்,
என் நல்ல மனுஷரே!
அதன் நீதி போதனையை மறவாதீர்.
பரிசுத்த பவுல் சொல்வது போல்,
‘வேத வாக்கியங்களெல்லாம் சீர்திருத்தலுக்கும்,
நீதியைப் படிப்பிக்குதலுக்கும்,
பிரயோஜனமுள்ளவைகளாயிருக்கிறது[30].'
ஆதலின், கோதுமை மணியை எடுத்துக் கொண்டு,
உமியை நீக்கி விடுக!
இப்போதும் நல்ல ஸ்வாமி !
உம் திருச்சித்தத்தால்,
எம்பெருமான் கிறிஸ்து சொல்வது போல்,
நம் யாவரையும் நல்ல மனுஷராக்கி,
அவருடைய பரமானந்தத்துக்குள் கொண்டு செல்லும்.
ஆமென் !

**சுபம் !!!**

## பின்குறிப்புகள்

1) **அப்போஸ்தலனாகிய பவுல்** : ( Apostle St Paul )
   - புதிய ஏற்பாட்டில் சொல்லப்படும் பரிசுத்தவான்
   - சவுல் என்ற பெயரை மாற்றிக் கொண்டு, பவுல் என்ற புதிய திருநாமம் கொண்டார்.
   - அநேக நிருபங்களை (**epistle**) இவர் எழுதி, அவை புதிய ஏற்பாட்டில் கணிசமான பகுதியாகக் காணப்படுகிறது.
2) **சர் யோவான்** : (Sir John)
   - மத்தியக் கால ஆங்கில மொழி வழக்கில் திருச்சபை பாதிரிகளுக்குத் தரப்படும் பட்டம்.
   - ஒரு வேளை ஜெ.ஃப்ரி சாஸர், பாதிரியைக் கேலி செய்யும் தொனியில் இப்படி சொல்கிறாரோ என்று கருதவும் இடமுண்டு.
3) **கேட்டோ**: (Publius Valerius Cato)

- கி.மு. 100ல் வாழ்ந்த ரோமக் கவிஞர்
- இலக்கண நூலாசிரியர்.
- புதிய கவிதை இயக்கத்தை தோற்றுவித்த மூலவர்
- லீதியா, டயானா ஆகிய கவிதைகளின் ஆசிரியர்.

4) **பரிசுத்த கெனெல்ம்** : (St Kenelm)
- இங்கிலாந்தைச் சேர்ந்த துறவி.
- மெர்சியா என்ற அரச குடும்பத்தில் பிறந்து, இளம் வயதில் அரசராகப் பதவி வகித்தார்.
- அவரது உறவினர்களால் கொலை செய்யப்பட்டார். பிற்பாடு, ஏதோ ஒரு அமானுஷ்ய விதத்தில், ஒருவருக்கு, கெனெல்ம் குறிப்பிட்ட இடத்தில் புதைக்கப்பட்டு இருப்பது, கனவுக் காட்சி போல் தெரிய வர, அவரது உடல் தோண்டி எடுக்கப்பட்டது. பிற்பாடு, வின்ச்காம்ப் என்ற இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது.

5) **மேக்ரோபியஸ்** : (Macrobius)
- கி.பி. 4, 5ம் நூற்றாண்டுகளில் வாழ்ந்த ரோம இலக்கண நூலார்.
- நவ – பிளாட்டோயிசம் கொள்கையைச் சார்ந்தவர். தத்துவவாதி.
- ஆப்பிரிக்க வம்சாவளியில் வந்தவர்.

6) **தானியேல்** : (Daniel)
- பழைய ஏற்பாட்டில் உள்ள புத்தகம்
- தானியேல் என்னும் தீர்க்கதரிசியின் வரலாற்றைப் பற்றிப் பேசுகிறது.
- தானியேல் என்பதற்கு ‘தேவனே என் நியாயாதிபதி' என்று அர்த்தம்.
- இளம் வயதில் பாபிலோன் நகருக்கு எடுத்துச் செல்லப்பட்டார். கனவுகளை விளக்கி, அதன் பலன்களை உரைக்கக் கூடியவர்.
- வாழ்ந்த காலம் கி.மு. 606.

7) **யோசேப்** : (Joseph)
- பழைய ஏற்பாட்டுக் கால தீர்க்கதரிசி

- யாக்கோபின் 11-வது புத்திரன். அவனது சொந்த சகோதரர்களால் அடிமையாக விற்கப்பட்டான்.
- பிற்பாடு இவன் நிலை உயர்ந்து, எகிப்து பாரவோன் மன்னருக்கு அடுத்த ஸ்தானம் அடைந்தான்.

8) **பாரவோன்** : (Pharaoh)

- பழைய எகிப்து அரசர்களுக்கு வழங்கப்பட்ட பட்டம்
- ‘ப்ர-ஆ' என்றால் ‘பெரிய மாளிகை' என்று பொருள். அது அரசர்களின் அரண்மனையைக் குறிக்கிறது.
- பழைய ஏற்பாட்டில், யாத்திராகமம் புத்தகத்தைப் பார்க்கவும்.

9) **க்ரோஸஸ்** : (Croesus)

- கி.மு. 595-547
- லீதியா நாட்டு அரசர்.
- பெரும் செல்வம் கொண்டவர்.
- பாரசீகர்களால் தோற்கடிக்கப்பட்டார்.
- கிரேக்க, பாரசீகக் கலாச்சாரத்தில் க்ரோஸஸ் என்பது செல்வத்தைக் குறிக்கிறது.

10) **அந்த்ரோமக்கி** : (Andromache)

- பழைய கிரேக்கத்தைச் சேர்ந்தவர்.
- ஹெக்டரின் மனைவி. ஈட்டியான் என்பவனின் புதல்வி.
- ட்ராய் நகரப் போரில், இவரது கணவர் ஹெக்டர், அக்கிலஸ் என்பவரால் கொல்லப்பட்டார்.
- இப்பெண்ணை நியோடாலமஸ் என்பவன் சிறைப்பிடித்து, எடுத்துச் சென்று காமக்கிழத்தியாக்கிக் கொண்டான்.

11) **அக்கிலஸ்** : (Achilles)

- தெட்டிஸ் மற்றும் பெலியஸ் ஆகியோரின் புதல்வன்
- ட்ராய் நகரப் போரில் போரிட்ட சிறந்த வீரன்.
- ஹோமரின் ‘இலியட்' காவியத்தின் மையக் கதாபாத்திரம்.
- இவனுடைய உடலில் எங்கு தாக்கினாலும் இவனுக்கு மரணமில்லை என்ற வரம் பெற்றவன். ஆனால், இவனது குதியங்கால் (ankle) மட்டும் இவனது பலவீனமான இடம். அதில் தாக்கப்பட்டு மரணமடைந்தான்.

**12) லான்ஸ்லாட்** : (Launcelot or Lancelot)

- மன்னர் ஆர்தர் பழங்கதைகளில் வரும் மாவீரன். வசீகர முகம் கொண்டவன்.
- 12-ம் நூற்றாண்டில் வந்த ‘Lancelot, the knight of the Cart' புத்தகத்தில் இவனைப் பற்றிக் குறிப்பு காணப்படுகிறது.

**13) இஸ்கரியேத்** : (Judas Iscariot)

- ஏசு கிறிஸ்துவின் 12 சீஷர்களுள் ஒருவன்.
- 30 வெள்ளிக்காசுகளுக்காக ஏசுவைக் காட்டிக் கொடுத்தான்.
- யூதாஸ் என்றால் ‘ஸ்வாமி துதிக்கப்படுகிறார்' என்று அர்த்தம்.

**14) கனிலோன்** : (Ganelon)

- பிரான்ஸ் தேசக் கதைகளில் இவனைப் பற்றிக் குறிப்பிடப்படுகிறது.
- மன்னர் சார்லிமானின் படைகளை இஸ்லாமியப் படைகளுக்குக் காட்டிக் கொடுத்த துரோகி.
- கவிஞர் தான்தே தன்னுடைய ‘தெய்வீக ஹாஸ்யம்' எனும் காவியத்தில் இவனைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

**15) சினோன்** : (Sinon)

- ட்ராய் நகரப் போரில் போரிட்ட கிரேக்க வீரர்.
- ஸினோன் என்றால் ‘துன்புறுத்துவது' என்று அர்த்தம்.

**16) பரிசுத்த அகஸ்டின்** : (St Augustine)

- கி.பி. 354 – 430
- பரிசுத்த ஆஸ்டின் என்றும் அழைக்கப்படுகிறார்.
- ஹிப்போ எனும் பிரதேசத்தின் தலைமைக் குருவாக இருந்தவர்.
- இலத்தீன் மொழி பேசியவர்; தத்துவவாதி
- ரோம் ஆளுகைக்கு உட்பட்ட ஆப்பிரிக்க நாட்டில் வாழ்ந்தவர்
- சிறந்த திருச்சபை மருத்துவர்.

**17) போத்தியஸ் :** (Boethius)

- கி.பி. 480 – 524 அல்லது 525
- 6-ம் நூற்றாண்டைச் சேர்ந்த தத்துவவாதி

- ரோம் நகரில் பிறந்தவர்.
- தியோடரிக் மன்னரிடம் ஊழியம் செய்து பாராட்டு பெற்றவர்.
- நல்ல கல்விமான்.

**18) ப்ராத்வார்டின்** : (Bradwardine)

- கி.பி. 1290 – 1349 அல்லது 1295 – 1349
- ஆக்ஸ்.ஃ.போர்டு பல்கலைக்கழகத்தில் கற்ற சிறந்த கல்விமான். கணிதவியல், இறையியல் ஆகியவற்றில் சிறந்து விளங்கியவர்.
- தலைமைக் குருவாக கேன்டர்பரி தேவாலயத்தில் பதவி வகித்தவர்.

**19) ஃ.பிஸியோலோகஸ்** : (Physiologus)

- கி.பி. 2ம் நூற்றாண்டு வாக்கில் அலெக்ஸாண்டிரியா நகரில் எழுதப்பட்ட நீதி உபதேசிக்கும் புத்தகம்.
- இதன் ஆசிரியர் யார் எனத் தெரியவில்லை.
- இதில் பறவைகள், விலங்குகள், தாவரங்கள், கற்கள், அற்புத ஜீவராசிகள் குறித்த விவரங்கள் உள்ளன. அந்த விவரணங்களில் இருந்து நமக்குத் தேவையான நீதி எடுத்துச் சொல்லப்படுகிறது.
- இது இலத்தீன் மொழிக்கு கி.பி. 700ல் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டது.

**20) தான் பர்னல்** : (Dan Burnell)

- பிரபலமான பழைய இலத்தீன் அங்கதக் கதைகளில் வரும் ஒரு குறிப்பு.
- ஒரு கழுதை தன்னுடைய வாலின் குறைவான நீளம் குறித்து அங்கலாய்த்தது.
  அந்த வாலின் நீளத்தை அதிகப்படுத்த பல இடங்களையும் தேடி, அந்தக் கழுதை பயணம் மேற்கொண்டது.

**21) கோப்ரெட்** : (Gaufred)

- ஒரு கவிஞர்.

**22) ரிச்சர்ட் லயன்ஹார்ட்** : (Richard, the Lionheart)

- கி.பி. 1157 – 1199

- இங்கிலாந்து அரசர்
- 16-ம் வயதில் போர் புரியத் துவங்கியவர்.
- பிரெஞ்ச் மொழி பேசியவர். இங்கிலாந்தில் சிறிது காலமே தங்கியிருந்தார்.

**23) ஏநிட்** : (Aeneid)

- விர்ஜில் எனும் கவிஞரால் எழுதப்பட்ட இலத்தீன் மொழிக் காவியம்.
- ட்ரோஜன் வீரன் ஏநியஸ் என்பவனைக் குறித்தது.
- கி.மு. 29 முதல் கி.மு. 19 வரையிலான காலகட்டத்தில் எழுதப்பட்டது.
- ஹோமர் எழுதிய இலியட், ஆடஸி காவியங்களுக்குப் போட்டியாக இதை விர்ஜில் எழுதினார் என நம்பப்படுகிறது.

**24) அரசன் ப்ரையம்** : (King Priam)

- ட்ராய் நகரப் போரின் போது, ட்ராய் நகர அரசனாக இருந்தவன்.
- ப்ரையம் என்றால் ‘விசேஷித்த வீரம் உடையவன்' என்று அர்த்தம்.
- ஹோமரின் இலியட் காவியத்தில் இவனைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

**25) பிர்ஹஸ்** : (Phyrhus)

- நியோடாலமஸ் என்றும் அழைக்கப்பட்டார்.
- கிரேக்க புராணத்தில் அக்கிலஸ் எனும் வீரனுக்கும், தெய்தேமியா என்ற இளவரசிக்கும் மகனாகப் பிறந்தார்.
- கொடூர உள்ளம் கொண்டவராகச் சித்தரிக்கப்படுகிறார்.

**26) ஹஸ்த்ருபல்** : (Hasdrubal)

- கார்த்தேஜ் நகர அரசன்
- கி.மு 146ல் ரோமாபுரியின் ஸ்கிபியோ என்பவனால் போரில் தோற்கடிக்கப்பட்டான்.

**27) கார்த்தேஜ்**

- துனிஸ் வளைகுடாவில் 3000 ஆண்டுகளாக கோலோச்சிய வணிக நகரம்.

- மூன்றாம் ப்யூனிக் போருக்குப் பின், ரோமானியர்கள் கி.மு. 146ல் இந்நகரை அழித்தனர்.
- பின்னரும், இது ரோமானியர்களின் முக்கிய நகராகத் திகழ்ந்தது.
- கி.பி. 698ல் இந்நகர் இரண்டாம் முறையாக அழிக்கப்பட்டது.

**28) நீரோ: (**Nero) – கி.பி. 37 - 68
- ரோம சாம்ராஜ்யத்தின் 5வது பேரரசர்
- இத்தாலியில் ஆன்ட்டியம் என்ற ஊரில் பிறந்தவர்.
- கொடுங்கோலன் என சரித்திர ஆசிரியர்களால் சித்தரிக்கப்படுகிறார்.
- அரசியல் உறவு, வர்த்தகம், கலாச்சாரம் ஆகியவைகளை மேம்பாடு செய்தார்.
- ரோமாபுரிக்கு தீயிட்டு, அது பற்றி எரிந்த போது, இவர் யாழ் இசை மீட்டியதாக எட்வர்டு கிப்பன் இவரைப் பற்றிக் குறிப்பு தருகிறார்.

**29) ஜாக் ஸ்டிரா** : (Jack Straw)
- இங்கிலாந்தில் குடியானவர்களின் புரட்சியை 14-ம் நூற்றாண்டில் நிகழ்த்திய மூவரில் ஒருவர்.
- விவசாயிகளின் தலைவர்.
- அவரும், அவரது போராட்ட சகாக்களும், கி.பி. 1381-ல் சிரச்சேதம் செய்யப்பட்டனர்.

**30) வேத வாக்கியங்களெல்லாம்**…
- புதிய ஏற்பாட்டில் அப்போஸ்தலனாகிய பவுல் எழுதின நிருப வாக்கியம்.
- பார்க்க **II** தீமோத்தேயு 3 : 16,17

X X X